*Ñāṉacampantam*
*Malar 11, itaḻ 10*
*September 10, 1952*

Record no. 357

# ஞானசம்பந்தம்

ர் 11] நந்தனஷு ஆவணிமீ 10—9—52. [இதழ் 10




ஆவணிமூலத் திருநாளில்

பொன்னுடையுடன் திரு. பக்தவத்ஸலம் அவர்கள்.


சிரியர் : ச. தண்டபாணி தேசிகர்.







உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 11] நந்தன ௵ ஆவணி ௴ 10—9—52. [இதழ் 10

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்.

## படிப்பு கால்: பழக்கம் முக்கால்:

அகத்தியருடைய குடிசையில்தான் தொல்காப்பியர் முதலிய பன்னிரண்டு மாணவர்கள் படித்தார்கள். துரோணாசாரியர் வீட்டில் அநேக அரசர் பெருமக்கள் எல்லாம் வந்து குருகைங்கர்யம் பண்ணிக்கொண்டேயிருந்து வில்வித்தையைப் படித்துக்கொண்டார்கள். வெள்ளியம்பலவாணர் மடத்திலே இருந்துதான் சிவப்பிரகாசர் தொல்காப்பியம் படித்தது. சிவஞானசுவாமிகள் கூடவே இருந்து கவிராக்ஷச கச்சியப்ப முனிவர் போன்ற பன்னிரண்டு மாணவர்கள் உருவானார்கள். அன்றைக்கும் இன்றைக்கும் உள்ள அனுபவம் ஆசிரியரிடத்து படிப்பது கொஞ்சமும் பழகுவது மிகுதியுமாக இருத்தலே மிகப் பயன் தரும் என்பது. பர்ணசாலைப் படிப்பிற்கு மேசை நாற்காலிகள் இல்லை. தடுக்கும் தரையுந்தான். விரிந்த கட்டிடங்கள் இல்லை. பரந்தவெளிதான். உலர்ந்த மரங்களின் நிழலிலே உறங்கி விழும் படிப்பன்று. மலர்ந்த மரங்களின் நிழலிலே மகிழ்ச்சிதரும் படிப்பு

அவர்களது ஏட்டில் இருக்கும் எழுத்துக்களை எண்ணத்திலடைத்து, மீட்டும் ஏட்டிலே தீட்டி எண்களைப் பெறுவதே அவர்களது நோக்கமல்ல. அதனை ஒரு தரமாகவோ தகுதியாகவோ மதிப்பதுமில்லை. ஒழுக்க வளர்ச்சியே கல்வியின் உயர்ந்த லக்ஷியம். ஆசிரியர்கள் லக்ஷிய புருஷர்கள். அவர்களிடம் கேட்டுத் தெளிவதைக் காட்டிலும் பார்த்துத் தெளியவேண்டிய விஷயங்கள் பல. அதற்காகவே குருகுலக் கல்விமுறை அந்தக் காலத்தில் ஏற்பட்டிருந்தது. அதனால், மிக உயர்ந்த முறையில் கல்வி வளர்ந்து வந்தது. ஆனால் படித்தவர்கள் பலபேர் இல்லாமல் இருக்கலாம். சிலர் தனக்கு இணையீடில்லாதபடி இருந்தார்கள். அவர்களைக் கொண்டு உலகமே உயர்ந்தது என்றுகூடச் சொல்லலாம்

இன்றைக்கோ ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மாணவனும் குறைந்தது ஏழு ஆசிரியர்களோடு பழகுகிறான். அதனால், மாணவரின் உண்மையன்பு பங்கிடப்படுகிறது. யாரிடத்தும் நிலைத்த அன்பு கிடையாது. அதனாலே நிலைத்த அறிவும் ஏற்படுவதில்லை. ஆசிரியர்கள் தங்கள் வயிற்றுப் பிழைப்பிற்காக உழைக்கிறார்கள். நாம் அதற்கு வழியாக இருக்கிறோம் என்ற எண்ணமே இன்றைய மாணவர்களிடத்தில் நிலைத்திருக்கிறது.

படித்த பின்போ தாம் ஒரு ஆசிரியரிடமிருந்து படித்து வந்தவர்கள் என்பதையும் மறந்துவிடுகின்றார்கள். 'எழுத்து அறிவித்தவனுக்கு என்ன தெரியும் என்பது' தரமுயர்ந்த மாணவர்களின் மந்திரமாக இன்றைக்கு இருக்கிறது. குருகுலவாசம் செய்த மாணவன் எவ்வளவு பெரியவனானாலும் குருவுக்கு அடங்கியேஇருப்பான். 'எழுத்தறிவித்தவன் இறைவன்' என்பது அவனுடைய ஆழ்ந்த அநுபவம். கும்பகோணம் கல்லூரியிலிருந்த தியாகராசச் செட்டியார் அவர்கள் எவ்வளவு உயர்ந்த நிலையை அடைந்தும் பிள்ளை அவர்களிடத்தில் எவ்வளவு பணிவாக உள்ளன்போடு இருந்தார்கள் என்பதைத் தமிழுலகம் நன்கு அறியும். மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யென்றால் பிற்காலக் கம்பர் என்று தமிழ்நாடு தெரிந்து



கொண்டிருக்கிறது. அவர்கள் தொல்காப்பியம் பாடங் கேட்டது கீழ்வேளூர் சொக்கலிங்க தேசிகர் அவர்களிடம். ஆதலால் பிள்ளையவர்கள் மகாவித்வானாகியும் சொக்கலிங்க ஐயாவிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தார்கள், இவ்வளவும் குருகுலவாசத்தின் பயன். அறிவிலும், அநுபவத்திலும் வைத்த மதிப்பு. அறிவு ஓராண்டு பத்தாண்டுப் பழக்கத்தான் மட்டும் வருவதன்று. அநுபவம் பலஆண்டு—பலமுறை பட்டுங் கெட்டும் வரவேண்டிய ஒன்று. இந்த இரண்டும் நிரம்பியவனே அறிவாளி, அவனே பிறர் அறிவாற்றலின் தரத்தை உணரத்தக்கவன். இந்தநிலை மாணவர்க்கு வரகுருகுலவாசம் வேண்டும். மாணவர் மனத்தில் அன்பு வளர - அடக்கம் வளர - ஒழுக்கம் உயர ஆசிரியர்களுடைய தகுதியும் சிறந்த சாதனம்.

இக்காலத்து ஆசிரியர்களுக்கோ பல பேருக்கு அறிவுத் துறையிலிருக்கும் ஆர்வத்தைக் காட்டிலும் அரசியல் துறையில் ஆர்வம் மிகுந்திருக்கிறது. ஆதலால் ஆசிரியர்கள் ஒவ்வொருவரும் தங்களை வருங்கால அரசியல் சிற்பிகளாக நினைத்துக்கொண்டு மாணவர்களைக்கொண்டு அரசியல் கோட்டைகளைக் கட்டுகிறார்கள். அதனால் எதிர் பார்த்த அறிவியல்துறை மழுங்கி, கிளர்ச்சியும் பூசலும் விளைகின்றன. இதனால் கல்வி நிலையங்களே கலக நிலையங்களாகக்கூட மாறிவருகின்றன. ஆசிரியர் தமது எதேச்சாதிகாரத்துக்கு இடையூறாக இருக்கும் மாணவர்கள் தலையில், அரசியல் பிளவுச் சுமைகளை மூட்டைகட்டிவைத்து அவர்களை வீட்டுக்கனுப்புவதற்கு வாய்ப்பாக ஆகிவிடுகின்றது. இந்தத் தொல்லைகள் நீங்கவேண்டுமானால் பழைய குருகுலக் கல்வி முறையே சிறந்ததென்று தெளிவாகக் கூறலாம். இன்று வரையில் இசைக்கலைக்கிருந்த ஏற்றமெல்லாம், குருகுல வாசத்திலேயே. அதுவும் இன்று மாறி; மணிக்கணக்கும் ஏட்டெழுத்தும் எடுப்பும் சிறப்பும் பட்டமும் பதவியுமாக ஆகிவிட்டது. அதனால் நாலுபேரறிந்து சுவைக்க முடியாதவர்களும் இசைமணிகளாக ஆகிவிடுகிறார்கள். இதற்கு நாம் வருந்தாமல் இருத்தற்கில்லை. சென்னையில் அண்மையில்

நடந்த கலைஞர் மகாநாட்டிலும் நாதசுரக் கலைக்கும் பள்ளிப் படிப்பே மேலானதென்று பேசியிருக்கின்றார்கள். அதன் பயன் போகப் போகத்தான் தெரியும். நமது மாகாண நிதி அமைச்சர் கனம் சி. சுப்பிரமணியம் அவர்கள் தற்போதைய கல்வி முறையில் பயின்றவர் சர்வகலாசாலைப் பட்டங்களைப் பெற்றவர்கள். அப்படியிருந்தும் அவர்கள் குருகுலவாசத்தின் சிறப்பைப்பற்றி பேசியிருக்கின்றார்கள் என்றால் அதுஎவ்வளவு சிறந்த வார்த்தை. கூட்டங்கூடிப் படிப்பதைக்காட்டிலும் குருகுல வாசத்தில் 60 நாழிகையும் ஆசிரியருடன் இருந்து பயில்வது எவ்வளவு மேலானது. இன்றைய மாணவன் 5-மணிநேரம் ஆசிரியர்களோடு பழகுகிறான். 18-மணிநேரம் பல்லாயிரத்துறைகளில் அறிவைப் பகுந்துக் கொடுத்து பல பேரோடு பழகுகிறான். உயிர்கள் சார்ந்ததன்வண்ணமாதலாலே 18மணிநேரம் பயிலுகின்ற பலருடைய குணங்கள் இவனிடம் படிகின்றன. ஆதலால், தீயசக்திகளும் புரட்சி மனப்பான்மையும் மருட்சியறிவும் அவனிடம் மலிகின்றன என்று சொல்லத் தயங்கவேண்டுவதில்லை. நாட்டில் கல்வியும் ஒழுக்கமும் உயர, ஒவ்வொரு ஆசிரியர் வீடும் ஒவ்வொரு கல்லூரி எனச் சர்வகலாசங்கங்கள் ஒத்துக் கொள்ளவேண்டும். ஒழுக்கத்துக்கு என்று ஒரு சோதனை தக்க வழியில் அமைக்கப்பெறவேண்டும். அறிவிலும் ஒழுக்கத்திலும் தேர்ந்தவர்களையே சிறந்தவர்களாக மதித்தல்வேண்டும். இந்த நிலையைக் கனம் மந்திரியவர்களின் பேச்சு உண்டாக்குமென்ற எதிர்நோக்குடையோம்.

**குருகுல வாழ்க்கையே திருவுடை வாழ்க்கை.**

---

## கடவுளருளுக்கு உரியவராக வேண்டுமா?

உன்னைவிட்டு அகங்காரமும் கோபமும் அகலாதபோது, நீ கடவுளின் அருளுக்கு உரியவனாகமுடியாது. அவைகளை அகற்று.

—குருஞானசம்பந்தர்.

# சொக்கநாத வெண்பா

**“ பொய்யில் காட்சியோர் பொருளுரை ”**

**வித்துவான் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்**
தமிழ்ப்பேராசிரியர், பல்கலைக்கல்லூரி, தருமபுரம்.

சென்ற திங்களில் வெளிவந்த ‘ஞானசம்பந்தம்’ சிவபோக சாரத்துள் வருந் திருவெண்பாக்கள் சிற்சிலவற்றை மேற்கொண்டு, வினையின் வலிமையைப்பற்றி எழுதப் பெற்ற கட்டுரையால், மக்களுக்கு இருவினையச்சத்தை உண்டாக்கியிருத்தல் கூடும். முற்றத்துறந்த பட்டினத்தாரும் பிறரும் அவ்வச்சத்தை உடையவராயிருந்ததும் அதைத் தீர்க்கும் வழிகளை உபதேசித்தருளியதும் நூல்களிலறிந்த நல்லோர் அவ்வினையச்சம் அடையாதிரார். ‘அஞ்சுவது அஞ்சாமை பேதைமை. அஞ்சுவது அஞ்சல் அறிவார்தொழில்” என்பது பொய்யாமொழி.

“ இக்காலத்து இன்னவினை என்று அமைப்பை அப்படியே
அக்காலத்து அவ்வூழ் அருத்திடுவை—இக்காலம்
தப்புவார் உண்டோ? தமியேற்கும் தப்பரிதுஎன்
அப்பனே! சொக்கநாதா.”

என்று தருமையாதீனத்தின் ஆதிபரமாசாரிய சுவாமிகள் அருளிய திருவெண்பா(12)வை நோக்கினால், இருவினைத் தளையின் நீங்கும்வண்ணம் உயிர்கட்கு இல்லை. இறைவனுக்கே நீக்கும் ஆற்றல் உண்டு. அப்பனாகிய சொக்கநாதனைத் தொழும் அன்பர்க்கே அவ்வினைத் தொடக்கினின்றும் தப்புதல் எளிது என்னும் உண்மை இனிது விளங்கும். வினையின் கொடுமையை அஞ்சி, அதன்வலையினின்றும் அகல விரும்பி விரைந்து இடைவிடாது முயல்கின்றவரே எப்பொழுதும், இறைவனை நோக்கி வணங்கிநின்று,

"என்னவினை நாயேற்கு இருக்குதோ? இக்காயத்து
என்னவினை நின்தாள் இயற்றுமோ?—என்னவினை
வந்திடுமோ? என்றுஅறியேன்; வந்தாலும் நின்அருளே
தந்திடுவாய் சொக்கநா தா." (29)

"எக்காலம் இக்காயம் இற்றிடுமோ? என்வினைகள்
எக்காலம் மும்மலங்கள் இற்றிடுமோ?—எக்காலம்
ஆனந்த சாகரத்தில் ஆடிடுமோ? என்உளந்தான்
ஆநந்தா! சொக்கநா தா." (39)

"எக்காலம் மெய்க்கே இரையிடுதல் இற்றிடுமோ?
எக்காலம் இக்கரணம் இற்றிடுமோ?—எக்காலம்
பேசாநு பூதி பிறந்திடுமோ? என்உளத்தில்
ஆசானே! சொக்கநா தா." (40)

"எக்காலம் தாகங்கள் இற்றிடுமோ? காயங்கள்
எக்காலம் ஆசைசினம் இற்றிடுமோ?—எக்காலம்
நல்லார் குணம்வருமோ? நாதாஎல் லாமுமாய்
அல்லானே! சொக்கநா தா." (49)

"வாக்கில்உரை பொய்யே! மனம்நினைப்ப தும்கவடே!
ஆக்கைதினம் செய்வது அகிர்த்தியமே!—நோக்கில்
திரிவிதமும் இப்படிநீ செய்வித்தால் முத்தி
தருவிதம்என்? சொக்கநா தா." (41)

"தீவினையால் இன்னம்இன்னம் தேகம்உறச் செய்வையோ?
தீவினையற்று உன்மயமாய்ச் செய்வையோ?—தாவிதமாய்
இன்னபடி மேல்விளைவது என்றுஅறியேன் ஈதுஅறிந்த
அன்னையே! சொக்கநா தா." (58)

என்று குறையிரந்து முறைமொழிந்து உய்வர்.

இத்தகையநெறி நலம் உடையவர்க்கு இருவினைக்கட்டு எளிதில் விடுவது எளிது. அவர் மார்க்கம் சன்மார்க்கம் ஆதலின், அவ்வாறு எளிதில் வினைநீங்கும். பேரின்பம் கைகூடும். துன்மார்க்கத்தில் ஒழுகுவார் பிறப்பும் இறப்பும்



ஆகிய பெருந்துன்பத்தின் நீங்கார். சன்மார்க்கத்தவர் நன்மையும் துன்மார்க்கத்தவர் தீமையும் அடைவர் என்னும் உண்மையைத் தொன்றுதொட்டு வழங்கிவரும் பழமொழியாகிய,

"தினைவிதைத்தவன் தினையறுப்பான்
வினைவிதைத்தவன் வினையறுப்பான்."

என்பதில், பொதுமையிற் குறித்துச், சிறப்பாக விளக்கியிருத்தல் காண்க. வினைவிதைத்தவன் வினையறுப்பான் என்பதால் இருவினையும் அடங்கிப் பொதுமைதோன்றினும் 'தினை' எனச் சிறப்புப்பொருள் ஒன்றைக் குறித்தவாற்றால் நல்வினையைப் பிரித்துணர்த்தும் வாய்மையை அறியலாம். "பண்ணிய பயிரிற் புண்ணியம் தெரியும்" என்றால், நன்றாக விளையப் பண்ணுமையாற் பாவம் தெரியும் என்று சொல்லாதே தெரியுமன்றோ? விதை ஒன்று போட்டால் சுரை ஒன்று முளைக்குமோ? எவ்விதையைப் போட்டாலும் அவ்விதையின் பலனேயன்றி வேறு விதையின் பலனைப் பெறுதலில்லை. ஒருவர்க்குரிய போகத்தை மற்றொருவர் அநுபவிக்க வாய்க்காது. நியதி என்னுந் தத்துவம் ஒன்று, "அவரவர் வினைவழி அவரவர் அநுபவம்" என நடத்திவருகின்றது. இதனை,

"எவ்விதையை மாக்கள்பயிர் இட்டார்கள். இட்டவரே
அவ்விதையின் போகம் அருந்துதல்போல்—செவ்விதாய்த்
துன்மார்க்கம் செய்வார்க்குத் தோன்றும் பிறப்பு. முத்தி
சன்மார்க்கம் சொக்கநா தா!" (52)

என்றதில் விளங்க அறியலாம். இதில் வினையச்சம் இன்றி, மேன்மேலும் ஏதேனும் வினைசெய்து பிறப்பிறப்புட்பட்டு உழல்வோர் மக்களல்லர் என்று குறித்தற் பொருட்டு மாக்கள் என்றார்போலும்.

இக்காலத்தில், தமிழ் கற்பார் பலர், "பிற்காலத்து நூல்களெல்லாம் கடவுள், கோயில், சாத்திரம், தோத்திரம், ஆணவம், மாயை, வினை, உயிர் முதலியவற்றையே அறிவிக்கின்றன

பழந்தமிழ் நூல்கள் இயற்கை முதலியவற்றை உணர்த்து கின்றன. அதனால் புதிய நூல்களைக் கல்லாமல், பழைய நூல்களையே கற்றல்வேண்டும்'' என்று வாய்ப்பறைசாற்றி வாணாளை வீணாளாக்கித் தாமுங்கெட்டு, மற்றவரையுங் கெடுக்க முயல்கின்றனர். அவர் கொள்கை பிழைபட்டது. அது பிழையே என்பதற்கு அவரால் பாராட்டப்படும் ஒரு நூலின் உட்கோளை இதிற் காட்டுவாம்.

கம்பர், திருவள்ளுவர், இளங்கோவடிகளைப் போல எங்நிலத்தும் பிறந்திலர் என்றார் ஒருவர். ஒருகூட்டத்தார் கம்பரை இகழ்ந்து ஏனை இருவரை ஒரு சிறிது புகழ்ந்து கொண்டாடுகின்றனர். ஒரு சிலர் சிலம்பையே பூண்டு திரி கின்றனர். இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தைப் பாடத் தொடங்கியதற்குக்காரணம் வினையின் வன்மையை உணர்த்து வதற்கு அதுகருவியாயிருந்ததேயாகும். அதனை,

''அரைசியல் பிழைத்தோர்க்கு அறம்கூற்று ஆவதூஉம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
**ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்** என்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரணம் ஆகச்
சிலப்பதிகாரம் என்னும் பெயரால்
நாட்டுதும். யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்''

என்று பதிகச் செய்யுள் பாடினவர் குறிப்பதாலுணரலாம். ஆயினும், அதை இளங்கோவடிகள் கருத்தாகக் கொள்ளல் எவ்வாறு என வினவுதலும் கூடும். அவர்க்கு அவ்விளங்கோ அடிகளே, கானல் வரிமுடிவில், ''யாழிசை மேல் வைத்துத் தன் ஊழ்வினைவந்து உருத்தது'' என்ற தொடர், முன்வந்து வாய்மூடச் செய்யும்.

ஊழ்வினையின் வலிமையையும், முற்பிறவியிற் செய் வினை தொடர்ந்து வருதலையும், வினைவிளைவில் அறிவு கெடு தலையும், உள்ளம் துன்பக் குழியில் வீழ்த்துதற்கு ஊக்கு தலையும், தீச்செயல்களைச் செய்ய நேர்தலையும், துன்பம்



உண்டாக்குதலையும் பிறவற்றையும் அறிவிக்க விரும்பிய இளங்கோவடிகள்,

1. 'ஊழ்வினை கடைஇ உள்ளம் துரப்ப'

2. 'வாழ்தல்வேண்டி ஊழ்வினை துரப்ப ...... நின்னகர்ப் புகுந்து, ... ... சிலம்பு பகர்தல் வேண்டி நின்பாற் கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி!

3. ''கோவேந்தன் தேவி கொடுவினையாட்டியேன் ... முற் பகற் செய்தான் பிறன்கேடு, தன்கேடு பிற்பகற் காண்குறூஉம் பெற்றிய''

4. ''ஊழ்வினை வந்தக்கடை''

5. ''ஊழ்வினை உருத்துஎழக் கூடாது பிரிந்து குலக்கொடி தன்னுடன் ... ... மதுரை புக்கு,''

6. ''ஊழ்வினைப்பயன்''

7. 'அடவிக்கானகத்து ஆயிழை தன்னை இடையிருள் யாமத்து இட்டு நீக்கியது வல்வினையன்றோ'!

8. ''இம்மைச் செய்தன யானறிநல்வினை
உம்மைப் பயன்கொல் ஒருதனி உழந்துஇத்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது''

9. ''வினைவிளைகாலம் ஆதலின் — வேம்பன் ... தேரான் ஆகி, ... கூவி ... கள்வன் ... ஆகில் கொன்று, அச் சிலம்பு கொணர்க என''

10. 'தீவினை முதிர்வலைச் சென்றுபட்டிருந்த கோவலன்'

11. ''நண்ணும் இருவினையும் நண்ணுமின்கள் நல்லறமே
கண்ணகி தன்கேள்வன் காரணத்தால் — மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
விளைவாகி வந்த வினை.''

12. "மணமதுரையோடு அரசு கேடுற வல்வினைவந்து உருத்தகாலைக் கணவனை அங்கு இழந்துபோந்த கடுவினையேன் யான்"

13. "தீவினைச் சிலம்பு காரணமாக ஆய்தொடி அரிவை கணவற்குற்றது."

14. "வல்வினை வளைத்தகோலை மன்னவன் செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோல் ஆக்கியது."

என்னும் பகுதிகளால், இம்மியும் பிழைத்துய்யாதவாறு வினைவந்து தாக்கும் உண்மையை வரலாற்றின் வைத்துணர்த் துணர்த்தியிருத்தலின், சிலப்பதிகாரத்தைப்பாராட்டும் உயர்வு உண்டாகியிருந்தும் 'நாத்திகம் பேசும் வன்பர் இளங்கோவடிகட்கு அன்பராதல் எங்கனம் பொருந்தும் ?

மேலும் அவர், நல்வினை செய்வோரை மிகப் போற்றியுள்ளார். அதனை,

1. "அறத்துறை விளங்கிய அறவோர்"

2. "அறம்புரிமாந்தர் அன்றிச் சேரா மூதூர்"

3. "வாய்மையின்வழாது மன்னுயிர் ஓம்புநர்க்கு யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள்"

எனபவை முதலியவற்றால் அறியலாம்.

1. "இம்மைக்கின்பமும் 2 மறுமைக்கின்பமும்

3. இம்மையும் மறுமையும் இரண்டும் இன்றி ஓர் , செம்மையின் நிற்பதும்"

ஆகிய மூன்று நிலைமைகள் இருக்கின்றன. அவற்றுள், மூன்றாவது, வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாத மெய்ந் நிலையைக் குறித்தது. அந்நிலையைப் பேரின்பநிலையென்று உணர்வு நூல்கள் உணர்த்துகின்றன. அந்நூல்களின்வழி



யாலும் அறிவுறூஉ (உபதேசம்) வழியாலும் அப்பேரின்ப நிலையை மெய்யன்பர்க்கு உணர்த்தவும் அதில் நிறுத்தவும் மடாலயங்கள் ஏற்பட்டன. அத்தகையவரே, மேலோர் நூலோர், பால்வகை தெரிந்த பகுதியோர் முதலிய பலநிலையருமாவர். அவர்க்கே

1. இறந்த பிறப்பில்தாம் செய்த வினையைப் பிறந்த பிறப்பால் அறிதலும்

2. பிறந்து இருந்து செய்யும் வினையால். இனிப்பிறந்து எய்துவினையின் பயனை அறிதலும் எளிதிற் கூடும்

என்றுணர்த்தவந்த ஆசிரியர் இளங்கோவடிகள், அவ்விரண்டில் ஒன்றை

"இறந்த பிறப்பின் எய்திய எல்லாம் பிறந்த பிறப்பிற் காணுயோர்"

என்று கூறி, மற்றொன்றை ஊகித்து உணரச் செய்துவிட்டார்.

"மேலோராயினும் நூலோராயினும் பால்வகை தெரிந்த பகுதியோர்"

என்றதால், அவர் (இளங்கோவடிகள்) மதிப்பிற்குரியவரை அறியலாம். மற்றும், அச்சிலப்பதிகாரத்தில்,

'ஒய்யா வினைப்பயன் உண்ணுங் காலைக் கையாறு கொள்ளார் கற்றறி மாக்கள்"

என்று கற்றுணர்ந்த சான்றோர் இருவினைப் பயனையும் நுகரும் காலத்தில், இன்பத்தில் இன்புறுதலும் துன்பத்தில் துன்புறுதலும் எய்தார் எனக் குறித்தல் காண்க.

"இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள் துன்பம் உறுதல் இலன்"

"இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்"

"இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்
ஒன்னார் விழையும் சிறப்பு"

என்னும் பொய்யாமொழிப்படி, துன்பம் அடையாதிருக்கும் மூன்றுவழிகளையும் உணர்ந்தவர், **'பொய்யில் காட்சியோர்'** என்னும் மெய்ப்புகழ்க்கு உரியவரே ஆவர். அவரே,

1. இம்மைக்கு இன்பமும்
2. மறுமைக்கு இன்பமும்
3. இம்மையும் மறுமையும் இரண்டும் இன்றி ஓர் செம்மையின் நிற்பதும்"

என்ற மூன்றனுள் பொருள் அறம் ஆகிய முதலிரண்டும் நீங்க, முடிவாகிய வீட்டின்பம் வேண்டும் **வித்தகர்**. அத்தகு பெரியர் என்றும் உள்ள உண்மை, ஏனைய நாட்டினும் தமிழ் நாட்டிற்கு மிக்க அளவில் கொள்ளப்படும். அவருள், **தருமைக் குருஞானசம்பந்தரும்** ஒருவராவர். அவரருளிய திருவாய் மொழிகளுள், வினையைப்பற்றிய உண்மைகள் மிகப் பலவாம். அவற்றைப் பின்னர் எழுதுவாம்.

மேலும், முன் கூறியவாறு சிலப்பதிகாரத்தின் தொடக்கத்திலிருந்து ஆங்காங்கு வினையின் வலிமையை நினைவூட்டி வந்த ஆசிரியர், நூல்முடிவில், தக்கதோரிடத்தை உளதாக்கிக் கொண்டு, விரித்துக் கூறுகின்றதைக் காண்மின்கள்.

நடுகற்காதையுள் வரும் 125–194-ஆம் அடிகளை மட்டும் நோக்குதல் போதும், அவற்றுள்.

"மீக்கூற்றாளர் யாவரும் இன்மையின்
**யாக்கை நில்லா** தென்பதை யுணர்ந்தோய்
மல்லல்மா ஞாலத்து வாழ்வோர் மருங்கில்
**செல்வம் நில்லா** தென்பதை வெல்போர்த்
தண்டமிழ் இகழ்ந்த ஆரிய மன்னரின்
கண்டனை அல்லையோ காவல் வேந்தே
**இளமை நில்லா** தென்பதை எடுத்து ஈங்கு
உணர்வுடை மாக்கள் உரைக்க வேண்டா
திருஞெமிர் அகலத்துச் செங்கோல் வேந்தே
நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை
விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்
மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய் விலங்கின் எய்தினும் எய்தும்
விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினும் காணும்
ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய கோலத்து ஒருங்குநின் றியலாது
**செய்வினை வழித்தாய் உயிர்செலும் என்பது**
பொய்யில் காட்சியோர் பொருளுரை"



என்னும் பகுதியையேனும் அறிதல் இன்றியமையாதது, **காட்சி**-அறிவு, அறிவிற் பொய்யின்மையாவது ஐயமும் திரிவும் நீங்கிய நிலைமையாம், ஆகவே ஐயமும் திரிவும் (**சந்தேக** விபரீதம்) அற்ற அறிஞர் வாயுரை (உபதேசம்) என்றதாம். இவ்வாறு, தமது நூலின் முதலிலும் முடிவிலும் நடுவிலும் வினையின்வன்மையையுணர்த்திய ஆசிரியர் இளங்கோவடிகள், முடிந்த முடிபாக,

"நற்றிறம் புரிந்தோர் பொற்படி எய்தலும்
அற்புளஞ் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்
அறப்பயன் விளைதலும் மறப்பயன் விளைதலும்
பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்
புதுவது அன்றே தொன்றியல் வாழ்க்கை

ஆன்ஏறு ஊர்ந்தோன் அருளின் தோன்றி
மாநிலம் விளக்கிய மன்னவன் ஆதலின்
செய்தவப் பயன்களும் சிறந்தோர் படிவமும்
கையகத் தனபோல் கண்டனை''

என்று குறித்தும்,

''பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்''

... ... ... ... என்பவை முதலாக இருபது நல்லறம் உரைத்தும் அமையாதவராய்,

''இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையாது ஒல்லுவது ஒழியாது
செல்லும் தேஎத்துக்கு உறுதுணை தேடுமின்
மல்லல் மாஞாலத்து வாழ்வீர் ஈங்கு என்று''

சமய சாத்திரப் பொருளுண்மையே உயிர்த்துணையாதலை வற்புறுத்தியருளினர். நாத்திகம் பேசி நாத்தழும்பேறியவர் இவ்வுண்மையை இனியேனும் அறிந்து நல்லறிவு பெற்று உய்வாராக.

(தொடரும்)

# *கட்டும் விடுதலையும்

திரு. T. H. விவேகாநந்தம் பிள்ளை
இறைபணியாளர் திருவெண்காடு.

ஆன்மாக்களாகிய நாம் இன்று அமைதியின்றி வாழ்கின்றோம். வெட்டுக்கிளி மனப்பான்மை கொண்டு மனம் தத்தளிக்கிறது. (Grasshopper mentality) எந்த இடத்திலிருப்பினும், மற்றோரிடத்திலிருக்க மனம் நாடுகிறது. எவ்வளவு நிதிபெற்றிருந்தாலும், இன்னும் நிதிபெருக்க மனம் அவாவுகிறது. சுயநலம் மிதமிஞ்சி நிற்கிறது. பிராணன் உடலை விட்டு நீங்கி ஓர் நிமிட நேரங்கழித்துத் தான், சுயநலம் நம்மை விட்டகலுகிறது.

எங்குக் கோளாறு? அறிவிலா? இல்லை மனிதன் அறிவின் சிகரத்தை அடைந்துவிட்டான். அதன் பலனைக் கண்கூடாகக் காண்கிறோம். அனுபவித்தும் வருகிறோம். வெகு குறைந்த அளவில் வெகு அதிக ஜீவராசிகளை அழிக்கக் கற்றுக்கொண்டு இருக்கிறோம். அதுதான் நாகரிகம் என்றும் பறைசாற்றுகிறோம். நொடிப்பொழுதில் லக்ஷத்து எண்பதினாயிரம் மைல் வேகத்தில் சென்று உலகத்தையே நிர்த்தூளி செய்யக்கூடிய அணுக்குண்டு கண்டுபிடித்துப் பெருமிதம் கொள்கிறோம். அன்று யேசுநாதர் புகட்டிய அறிவுரைகளை, 2000 ஆண்டுகளுக்குப்பின், இன்று, மின்சார அலைகள் உதவியால், சேமித்து நாம் கேட்கக்கூடிய நிலைமையில் விஞ்ஞான வளர்ச்சி செய்துள்ளோம். நூற்று நாற்பதடுக்கு மாடியில் வாழும் வசதி பெற்றுள்ளோம். ஆனால் மன நிம்மதி மட்டுமில்லை. வறட்டறிவு வெகுவாய் வளர்ந்து விட்டது. அன்பு சூனியப்படவே, சிவத்தைப் புறக்கணித்தோம். 'கண்டதேகாட்சி, கொண்டதே கோலம்' என்னும் உலோகாயதர்களாய் விளங்குகிறோம். வல்வினை, மலமாயைகளால் உயிர் கட்டுண்டு சுழலுகிறது.

*20—5—51 திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டில் நடந்த சொற்பொழிவு.

மனமாகிய பாற்கடலில், தீய, நல்ல எண்ணங்களால் கடையப் பட்டு, விஷமும் அமுதமும், வெளிப்பட்ட வண்ணமாயிருக் கின்றன. மனத்தில் எழும் எண்ணங்களைக் காட்டும் கருவி ஒன்று நம் ஒவ்வொருவரிடமும் ஸ்தூலமாக இருப்பின், நாம் ஒருவரையொருவர் கண்டுகொள்ள நாணுவோம்.

இச்சண்டமாருதத்திலிருந்து தப்புவதற்குத் தக்க சாதனங்களைக் கடைப்பிடித்து, கட்டுண்ட நிலைமையிலிருந்து தப்பி, விடுதலைபெற்று, சிவபதத்தையடையவேண்டும். அச் சிவபதத்தை நோக்கி உயிர் செய்யும் பிரயாணமே, அதன் உலகவாழ்க்கை. பிரணவத்தை வில்லாக வளைத்து, உயிரை அம்பாக வைத்து, பிரமமாகிய இலக்கை எய்தவேண்டும்.

விண்ணில் ஓர்காந்தம், குறிப்பின்றிப் பல்வேறு திசை களில் உலவுகிறது. இழுக்கும் சக்தி பாயும் தூரத்தில் மணல் போன்ற எண்ணிக்கையில்அடங்காத இரும்புத் துளிகள் கிடக்கின்றன. விண்ணிலிருந்து பல திசைகளில் மண் திவலை கள் விழுந்த வண்ணமாயிருக்கின்றன. காந்த அசைவால் இரும்புத்துளிகள் இழுக்கப்படுகின்றன. விழும் மண் திவலை களால் இரும்புத் துளிகள் மூடப்பட்டுக் காந்தத்தை அடைவதி லிருந்து தடைசெய்யப் படுகின்றன. ஆயினும் பல இரும்புத் தூள்கள் இம்மண் மறைப்பையும் தப்பி, காந்தசக்தியுடன் ஒன்றுகின்றன.

இங்கு உருவகப்படுத்தப்பட்ட காந்தம் பதி. இரும்புத் தூள்கள் ஆன்மாக்களாகிய பசுக்கள். மண்திவலைகள் பாசம் இக்காட்சி, ஆன்மாக்கள் கட்டுண்ட நிலைமையையும். விடுதலை பெறும் நிலைமையும் சித்திரித்துக் காட்டுகிறது.

சத்தாகிய சிவத்தின்கண் தோய்ந்து, சிவமாய் நின்று சிவபோகத்தை அறிந்து நுகரக் கூடிய ஆற்றல் ஆன்மாவுக் குண்டு. அதேபோல் அச் சத்தாகிய உலகியலில் தோய்ந்து உலகப்பொருளாய் இயைந்து உலகியல் இன்பத்தை நுகரக் கூடிய ஆற்றலும் ஆன்மாவுக்குண்டு. சத்தோடியைந்து சத்தாகிய சிவத்தையும் அசத்தோடு கூடி அசத்தாய் நின்று



அசத்தையும் அறியும் தன்மைஉடையதாக விருப்பதால் ஆன்மாவுக்குச் **சதசத்து** என்றொரு பெயருமுண்டு. ஆன்மா பின்கூறிய நிலைமையில் கட்டுண்டும். முன்கூறிய நிலையில் விடுதலையும் பெற்றுளது. ஆன்மா சத்தாகிய சிவமுமன்று; அசத்தாகிய உலகியற் பொருளுமன்று; ஆனால், ஆன்மாவுக்கு விலக்கத் தக்கதாகிய பகைப்பொருள் உலகிய லின்பமாகிய பாசம். கொள்ளற்பாலதாகிய நட்புப்பொருள் சத்தாகியசிவம். இந்நெறியில்தான் ஆன்மா நிற்கவேண்டும். ஆனால் நடை முதலில் சாதாரணமாய் ஆன்மா இந் நெறியில் நில்லாது.

அரசிளங்குமரன் ஒருவன் வேடர் கூட்டத்தில் வளர்ந்து வந்தான். தன்னை ஒரு அரசன் மகன் என்பதை மறந்து, வேடர் வசமே நின்று, தன்னை ஒரு வேடனாகவே எண்ணி விட்டான் அவன் வளர்ச்சியைப் பார்த்துக்கொண்டே வந்த வேந்தன், அவன் சொன்னால் கேட்டுத் தெளிந்து அச்சொல் வழி நிற்கக்கூடிய நிலை வருவது கண்டான். தானும் ஒரு வேடனுருவிற் சென்று அவனை நோக்கி, "நீ வேடன் இல்லை; வேந்தன் மகன்" என்று விளக்க, அரசன்மகனும் வேந்தன் பண்புகொண்டு மாறினான். அதுபோல, ஆன்மா ஐம்பொறி களோடு கூடியிருந்து, தன்னை அவ் வைம்பொறியாகவே எண்ணிச் சிவபரம்பொருளொடு பிரிவறவிருக்குந் தன் னியல்பை யறியாதவனாய், பின்னர், மலபரிபாகமும், இரு வினை யொப்பும் எய்தி, ஞானசாரியனாய் வந்த சிவபிரானால் சிவதீக்கைப் பெற்று, 'நானேநீ' என்னும் அந்நிய மில்லாத் தன்மையினை உபதேசித்துணர்த்தப் பெற்றுத்தன்னைத் தம் வயப்படுத்திய அவ்வைம்பொறிகளை விட்டு, அம்முதல்வன் திருவடிகளையடையும். ஆன்மாவை அரசிளங்குமரனாகவும், முதல்வனை அரசனாகவும், ஆன்மாவின் அறிவுப்பெருஞ் செல்வமுழுவதையும் வழிபறித்துக்கொண்டு, இழிதொழிலில் ஈடுபடுத்திச் சிறுமையுறச் செய்யும் பண்புபற்றி ஐம்பொறிகளை வேடர்களாகவும் உருவகஞ் செய்தார்.

ஆகாயத்தில் பறக்கும் காற்றாடிகள் எல்லாம் விடுதலை பெறுவதில்லை. ஏதோ ஒரு சில காற்றாடிகள் தான் அறுபட்டு

விடுதலை பெறுகின்றன. அதுபோல் தவப்பயன் நேரும்போது தான், மலபரிபாகம் எய்த, முதல்வன் தோன்றாத்துணையாய், உயிருக்குயிராய், சோதிக்குட் சோதியாய், ஞானசாரியனாய் விளங்கி, அருள் சுரத்து ஆன்மாவுக்குப் பதிஞானம் உதிக்கச் செய்து 'அந்நியமின்மையின் அரன்கழல்' செலச்செய்வான். அத்தவப்பயன் (வினைப்பயன்) நேராதவரை, சூரியனைக் கண்ட அந்தகர் போல், ஆன்மா நிலைதடுமாறி நிற்கும். குருடுபெற்ற கண், அறுத்து பக்குவம் பண்ணும் நிலைமையை அடைந்தால் தான் கண்வைத்தியன், சிகிச்சை செய்ய ஆரம்பிப்பான். அது போல மலபரிபாகத்தால் மனம் பக்குவ மடையும்போது தான் முதல்வன் ஞானசாரியனாய் விளங்கி, அவன் திருவடிப் பேறடையச் செய்வான். தாமரைமொட்டுக் கூட, பக்குவப் பருவத்தில் தான் பரிதி கண்டலரும்.

சிலர் காலை 9-மணிக்குச் சோறுண்ணுகிறார்கள்; சிலர் நடுப்பகலில் உண்கிறார்கள்; மற்றுஞ்சிலர் மாலை நேரத்தில் அருந்துகிறார்கள். ஆனால் எல்லோரும் ஒருநாளில் எப்போதாவதொரு சமயத்தில் உணவருந்தியே தீருகிறார்கள். அது போல, ஆன்மா தனக்கு அந்நியமில்லாத சத்தாகிய சிவத்தை, எப்போதாகிலும் அடைந்தேதீரும். சதசத்தாகிய ஆன்மா தனக்கு அந்நியமாந்தன்மையுடைய அசத்தின் தொடர்பை (பாசம்) விட்டதும், அந்நியமில்லாத்தன்மைவாய்ந்த சத்தாகிய சிவத்தையே சென்று சாரும். சத்தோடும், அசத்தோடும், தொடர்புகொள்ளும் இயல்பினால்தான் 'சத்து', 'அசத்து' என்ற இரண்டிலொன்றைச் சார்ந்துநிற்பது ஆன்மாவுக்கு இயல்பேயன்றி, தனித்துநிற்கும் இயல்பு கிடையாது. ஊசலாடும் ஒருவன், அதன் கயிறு அறுமாயின், அவன் தரையையே சாருவான். அதுபோல, ஆன்மா அசத்தின்தொடர்பு விட்டால், சத்தாகிய சிவத்தையே சென்று சாரும். சில ஆன்மாக்கள் சடுதியிலும், சில ஆன்மாக்கள் தாமதித்தும் அந்நிலையைப்பெறும். அது எவ்வாறெனில், பலதரத் திடம்வாய்ந்த கயிறுகளால் கட்டப்பட்ட ஊசல்கள்போன்று.

ஆன்மாவுக்கு விலக்கத்தக்கதாகிய பகைப்பொருள் பாசம். கொள்ளற்பாலதாகிய நட்புப்பொருள் சிவம். இச்



சிவபோகத்தையடைய, சீவபோகத்தைக் குறைக்கவேண்டும். அன்பே சிவம் என்பதை உண்மையில் கடைப்பிடித்து எவ்வுயிர்க்கும் அன்புகாட்டவேண்டும். பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டு கழிக்கவேண்டும். ஐம்புலனுக்கு வேறாக ஆன்மா தன்னைக் காணவேண்டும். "பாசத்திலே பற்றற்றால் அரன் வெளிப்படுவான்." திருவைந்தெழுத்து உள்ளக் கனிவுடன் உச்சரித்து, இறைபணியில் நிற்றல்வேண்டும். இவை போன்ற சாதனங்கள், கட்டுண்ட ஆன்மா விடுதலையடையத், துணைக்கருவிகள்.

விளக்கு, பொருள்களைக் காட்டுகிறது. அப்படியிருந்தும் விளக்கையே பார்த்துக்கொண்டிருப்பவனுக்கு, அப்பொருள்கள் புலப்படா. அதுபோல் இறைபணியில் நிற்கும் உயிர் சிவனையே பார்த்துக்கொண்டிருக்கும். அதற்கு மாயப்பிரபஞ்சம் புலப்படாது. அது புலன்களிற் சிக்குவதில்லை; விருப்பு வெறுப்புகளிற் படுவதில்லை; பாசக்கயிற்றின் சுழலில் கட்டுப்படுவதில்லை. அப்படிப்பட்ட உயிருக்கும் உடலுக்குமுள்ள தொந்தம் புளியம்பழத்துக்கும் அதன் ஓட்டுக்குமுள்ள தொந்தம்போன்றது. அதாவது அவ்வுயிர் உடம்பிற் குடியிருந்தும், அதனைவிட்டுக் கழன்று நிற்கின்றது. தூணைப் பிடித்துக்கொண்டு சுற்றுபவனின் நிலைமைபோலும். பாத்திர விளிம்பில் திடமாய் உட்கார்ந்துகொண்டு, பாகில் விழுந்து மாயாது, அப்பாத்திரத்திலுள்ள வெல்லப்பாகை உண்ணும் ஈயைப்போன்றும், சிவத்தைத் தியானித்திருக்கும் ஆன்மா கட்டுப்படுத்தும் பாசவலையில்சிக்காது, விடுதலைபெற்றதாகவே விளங்கும்.

# ஆவணிமூலத் திருவிழா

தருமபுரம் தெய்வத்தமிழ் விழாக்களுக்கு நிலைக்களனைது. மாதமொரு விழாவிற்குக் குறையாமல் நடப்பதும், பெருவாரி யான ஆதரவுடன் மக்கள் வந்து கண்டு கேட்டுச்செல்வதும் அன்பர்கள் அறிவர்.

ஆவணிமூலம் கண்ணுக்கினிய பொருளாகிய குருஞான சம்பந்தர் கையில்வந்த சொக்கேசனுக்குக் கொண்டாடும் திரு விழா. மூலத்திற்கு முன்னர்ப் பத்துநாட்கள் தொடங்கி விழா நடைபெறும்.

30—8—52 காலை ஆவணிமூலம். என்றுமே இல்லாத ஒரு மகிழ்ச்சி தருமையில் தாண்டவமாடிற்று. உந்தூர்திகள் இங்கு மங்கும் விரைந்துசென்றன. காலை பத்துமணியளவில் மடம் எங்கணும் மக்கள் கூட்டம் நிறைந்தது. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நி தானமவர்கள் பூசைமடத்திற்கு எழுந்தருளினர்கள். துவாந்த சாந்தப் பெருவெளியாம் மூலத்தலத்து முளைத்த முழுமுதலுக்கு அபிஷேகம்செய்யத்தொடங்கினர்கள். சிவபுராணப் பேரொலி யும்; நாதசுர இன்னிசை முழக்கமும் பூசைமடத்தினை நிரப்பி ஆண்டவனுடைய நாதசொரூபத்தை விளக்கிநின்றன. 11-30 மணியளவில் தீபாராதனைகள் முடிவுற்றன.

**வெளியீடு :**

சைவசித்தாந்த சாத்திர நூல்களுள் ஒன்ருய ‘சிவஞான சித்தியார்’ என்ற சாத்திரநூல் அன்று ஆதீன வெளியீடாக வெளியிடப்பெற்றது. புதியமுறையில் முற்குறிப்புகளுடன் மூலம்மட்டும் வெளியிடும் நூல் ஆவணிமூலவிழாவில் வெளியிடப் பெற்றது குறிப்பிடத்தக்கது. அப்பணியினைச் சிறக்க முடித்துக் காட்டியவர்கள் ஆதீனக் கல்லூரிப் பேராசிரியர் வித்வான், திரு. **முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்.** வெளியீடுகள் அன்பர்கட்கு வரிசையறிந்து வழங்கப்பெற்றன. நடுப்பகல் ஒருமணியளவில் மாகேசுவரபூஜை முடிவுற்றது.

தருமபுர ஆதீனம் ஆவணிமூலத் திருநாளில்



திருவள்ளுவர் நாடகத்தில் பங்குகொண்ட மாணவர்கள்



### கல்வி நிலையங்களின் ஆண்டுவிழா :

மாலை நான்குமணியளவில் இன்னிசைத்தட்டுக்கள் எல்லோருடைய இதயத்தையும் தொட்டுக்கிளப்பின. ஆதீனக் கல்வி நிலைய மாணவர்கள் அனைவரும் ஆதீன மடாலய முன்முகப்பில் கூடினர். சென்னை முன்னாள் அமைச்சர் திருவாளர் M. பக்தவத்ஸலம் அவர்கள் B.A., B.L., தலைமைதாங்க இசைந்திருந்தார்கள்.

மாலை ஐந்துமணியளவில் தலைவரவர்கள் வந்துசேர்ந்தார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் அலங்கார மேடைக்கு எழுந்தருளினார்கள். ஒருபுறம் பன்மொழிப்புலவர் திருவாளர் T. P. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் இருக்க, மற்றொருபுறம் முன்னையமைச்சர் திருவாளர் M. பக்தவத்ஸலம் அவர்கள், இருக்க, நடுவில் ஞானவேந்தராகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் எழுந்தருளியிருந்த காட்சி, மொழியும், தெய்விகமும், அரசியலும் இணைந்து நிற்கின்ற எதிர்காலச் சிந்தனையை உருவாக்கிற்று.

விழாத்தொடக்கத்தில் சங்கீதபூஷணம் திரு.P சுவாமிநாதன் அவர்கள் இறைவாழ்த்துப் பாடினார். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆசியுரை அருளினார்கள் தலைவரின் நல்லியல்புகளைப் பாராட்டி ஆசிகூறினார்கள். பின்னர், தலைவரவர்களுக்கு மாலை சூட்டி, பொன்னாடைபோர்த்திச் சிறப்பிக்கப்பெற்றது தலைவரவர்கள் முன்னுரையாக அரிய கருத்துக்களை அளித்தார்கள். அவர்கள் பேச்சின் சுருக்கம் தனியே தரப்பட்டுள்ளது. கல்வி நிலையங்களின் ஆண்டறிக்கைகள் வாசிக்கப்பெற்றன.

### பல்கலைச்செல்வர் :

தமிழ், தான்தோன்றிய நாள்முதல் எத்தனையோ தவச்செல்வர்களைப் பெற்றெடுத்திருக்கிறது. மொழியின்—மொழியின் கலையை அறிந்தனுபவிக்கும் பண்புடையார் ஒரு சிலரே இருப்பர். அன்னாரை ஊக்குவிக்கும் ஒருசிலர் இருந்தால்தான் அறிஞர் அறிவுலகில் நடமாடமுடியும்.

அம்முறையில் பதினெண்மொழிகளைக்கற்றுத் துறைபோய வித்தகர் திருவாளர் T. P. **மீனுட்சிசுந்தரம் பிள்ளை** M.A., B.L., M.O.L., அவர்களுக்கு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் "பல்கலைச் செல்வர்" என்னும் பட்டமளித்துப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தார்கள். பின்னர், பல்கலைச் செல்வரின் முழக்கம் தமிழ்மணங்கமழும் தனித்ததொரு பேச்சாக இருந்தது. பேச்சின் சுருக்கம் மற்றோரிடத்தில் வெளியிடப்பெற்றுள்ளது.

பின்னர் ஆதீனக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் வித்வான், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் விழா வெளியீட்டைப்பற்றிப் பேசுகையில் ஆதீனத்தின்வெளியீடாக, சிவஞானசித்தியார் ஆங்கில உரையுடன் வெளியிட்டதையும், ஞானவர்ணபாஷ்யத்தை மாதந்தோறும் வெளியிட்டுவருவதையும், மெய்கண்டசாத்திரத்தை முழுதும் வெளியிட்டபின்னும், இச்சுபக்கத்தின் மூலம் வெளியிடுவதின் நோக்கத்தையும் குறிப்பிட்டார்கள்.

### பரிசுகள் :

ஆதீனக் கல்லூரி, தேவாரபாடசாலை, வேதசிவாகம பாடசாலை, உயர்நிலைத் தொடக்கப்பள்ளிகளின் மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. தலைவரவர்களின் முடிவுரைக்குப் பின்னர் கல்லூரித் துணைத்தலைவர் வித்வான், திரு. ச **தண்டபாணி தேசிகர் அவர்கள்** நன்றிகூற, மாலை விழா நிறைவுற்றது.

### இசை வகுப்புத் தொடக்க விழா :

பின்னர் இசை வகுப்புத் தொடங்கப்பெற்றது. மாயூரம், தருமை முதலிய இடங்களிலிருந்து மாணவ மாணவிகள் இசை பயிலத் தங்கள் பெயரைப் பதிவுசெய்துகொண்டனர். அவர்களுக்கு இலவச இசைவகுப்புத் தொடங்கப்பெற்றது. இசையின் உயர்வையும் நலத்தையும் எடுத்துப் பாராட்டி, இசைக்கலைக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பை விளக்கித் தொடங்கிவைத்தார்கள் நமது மதிப்பிற்குரிய தலைவரவர்கள்.



இவ்வகுப்பில் வாய்ப்பாட்டுப் பிரிவிற்கு, **சங்கீதபூஷணம் திரு.P. சுவாமிநாதன் அவர்களும்**, பிடில்பிரிவிற்கு, **கும்பகோணம் திரு. சம்பந்தம் பிள்ளை அவர்களும்**, மிருதங்கத்திற்கு **திரு. விசுவநாதையர் அவர்களும்** ஆசிரியர்களாக அமைக்கப்பெற்றிருக்கிறார்கள். அவர்கள்மூலம் வகுப்பைத் தொடங்கிவைத்தார்கள்.

### நாடகம் :

இரவு ஒன்பதுமணியளவில் திருவாளர் **M. பக்தவத்ஸலம்** அவர்கள் தலைமையில் **திருவள்ளுவர்** என்ற தமிழ் நாடகம் கல்வி நிலைய மாணவர்களால் நடித்துக்காட்டப்பெற்றது. ஏழு மணி யளவிலேயே முகப்புக்கொட்டகை நிறைந்துவிட்டது. ஒன்பதுமணியளவில் நாடகம் தொடங்கப்பெற்றது. திருக்குறளைக் காட்சிகளாகத் தயாரித்து நாடகம் அமைக்கப்பட்டிருந்தது. மாணவர்கள் அனைவரும் தக்கமுறையில் தத்தம் பொறுப்பைச் சிறப்புற நடித்துக்காட்டினர். தலைவரவர்கள் நாடகத்தைச் சிறப்பித்துப்பேச, விழா இரவு 11-30மணியளவில் நிறைவுற்றது.

---



---

தருமபுர ஆதீன மடாலயத்தில்

**ஆவணிமூலத் திருநாள் 30—8—52 அன்று**

# ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்

## வழங்கிய ஆசியுரை

அன்பர்களே! இன்று ஒரு நல்லநாள்; நமது ஆத்மார்த்த மூர்த்தியாகிய சொக்கலிங்கத்திற்கு உகந்தநாள். சொக்கலிங்கப்பெருமானே அடியவருக்காக மண்சுமந்து கூலி கொண்டு அக்கோலால் மொத்துண்டவன்—அவனே பெண் சுமந்த பாகத்தன், விண்சுமந்த கீர்த்தியை உடையவன். கண் சுமந்த நெற்றிக்கடவுள். இத்தகையவன் மண்சுமந்தது மட்டுமல்ல. மன்னவனால் அடிபட்டான் என்றால் இது எதனைகாட்டுகிறது? இறைவனின் எளிமைக் குணத்தைக் காட்டுகிறது. "கண்ணுதற் கடவுள் கழகமோடமர்ந்து தமிழை" ஆராய்ந்தவர் அவ்வண்ணலின் திருவிழாக்களில் கல்விநிலையங்களின் ஆண்டுவிழா நடைபெறுவது குறிப்பிடத்தக்கது.

இவ் விழாக்களுக்கு நமது பக்தவத்சலம் அவர்கள் தலைமைதாங்க இருக்கிறார்கள். சற்றேறக்குறையப் பத்தாண்டுகளாகப் பொதுவாழ்விலும், அரசியல் வாழ்விலும் அவருடைய சேவை மக்களுடைய மனத்தை மிகவும் பிணித்திருக்கிறது. ஒரு மந்திரியாருக்காகப் பெருக்கையும் உண்டாக்கி, ஒரு ஏழைக்கிழவிக்காக உடைப்பையும் அடைத்து எளியர்க்கு எளியனாந்தன்மையையும், அகங்கரித்தவர்களை அடக்கி ஆளும் தன்மையையும் ஆண்டவன் காட்டுகின்றான். அப்போது அந்த மந்திரி வாயிலாக வந்த வாக்கு திருவாசகம், ஒருமந்திரி குன்றத்தூரில் பிறந்தவர். சோழ ராஜாவிடத்து மந்திரியாயிருந்தவர். திருமுறை அருமைகளை விளக்கி, அறிவுக்கருவூலத்தைத்திறந்து அன்றுமுதல் இன்று வரை இறை அனுபவத்தில் எல்லாரையும் திளைக்கச்செய்யும்



பெரியபுராணத்தைப் பாடித்தந்தவர் அவர். இந்த இரண்டு மந்திரிகளும் இல்லையென்றால் தமிழனுக்குக் கனிந்த உள்ளம் பிறக்காது. கடைத்தேறும் வழிகளைக் கண்டுபிடிக்கமாட்டான். இந்தக்குறையை நீக்கி நாட்டை உய்வித்தவர்கள் நல்லமைச்சர்கள். உய்வித்ததும் தமிழைக் கொண்டுதான் என்பதை மறுபடியும் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். இன்றைக்குத்தலைவராக இருக்கும், நம்முடையபக்தவத்ஸலம் அவர்களோ தமிழ்ப்புலமையும் பேச்சாற்றலும் செயலாற்றலும் உடையவர்கள் என்பதை நாம் கூறி நீங்கள் தெரிய வேண்டியதில்லை. தமிழ்விழாவில் பெரியோர்கள் பேசிய பேச்சின் பிரதிபலிப்பு உங்கள் செவியைவிட்டு இன்னும் ஓய்ந்திருக்காது. சமீபத்தில்கூட இத்தாலிய நாட்டுக்குச்சென்ற நம்முடைய ஏட்டுச்செல்வங்களைத்திரும்பவும் இந்தியாவிற்குக் கொண்டுவருவதற்குரிய பெருமுயற்சியில் இவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள் என்று பத்திரிகைகள் சொல்லுகின்றன. இவர்களுக்குத் தமிழினிடமுள்ள ஆர்வமும் அறிவும் தமிழ்விழா வரவேற்புரை ஒவ்வொரு பகுதியிலும் வெளியாகின்றன. நமமுடைய ஆதீனத்திற்கு ஜீவாதார ஸ்தானம் மதுரை. அங்கேதான் நமது உயிருக்குயிரான சொக்கலிங்கப்பெருமான் எழுந்தருளியிருக்கிறார். அங்கே நமது ஆதீனத்து அன்பர் குழாங்களின் தலைவராக, சமயப்பேரரசின் சேனைமுதலியாராக இருப்பவர் நமது அன்பர் P. T. ராஜன் அவர்கள். அவரும் அமைச்சராயிருந்தவர்தான்.

சிரத்தானமாயிருப்பது தொண்டைநாடு. அங்கே நமது அன்பராயிருந்து தமிழருள்ளத்தைக் கவர்ந்திருப்பவர்கள் இவர்கள். இவர்களும் ஒரு மந்திரியார்தான். இந்த இரண்டு அமைச்சர்களையும் வைத்துக்கொண்டு நமதாதீனம் விளங்குகிறது. இதை ஞாபகப்படுத்தத்தான் அன்றைக்கு மதுரையிலும் தொண்டைநாட்டிலும் இரண்டு அமைச்சர்களிருந்தார்கள் என்று அறிவித்தோம். செந்தமிழ்வளர்த்த சொக்கலிங்கப்பெருமான் பலபாண்டிய மன்னர்களைக்கொண்டு பல புலவர்களைச் சங்கமேறச்செய்தான். அக்காலத்து அமைச்சர்கள் அதனைப்பாராட்டிப் புலமையைப் பலருக்கும் பயன்படுத்

திருர்கள். இன்றைக்கும்நமதுபுலவர் சொக்கலிங்கப்பேரரசின் கீழ்ப்பாராட்டப்படுகிருர், ஒருபழைய அமைச்சர் பக்கத்தில் இருக்கிருர். அப்படிப் பாராட்டப்படுபவர் யார்தெரியுமா? நமது பன்மொழிப்புலவர் உயர்திரு. தெ.பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை. அவர்தான் பல மொழிகளில் புலமையிருந்தும் இவ்வளவு அடக்கமாக இருக்கிருரே. ஆழமான நீர்நிலை கலங்காதது போலத்தான் இவர் நிலையும். எத்தனைமொழிகள் படித்தாலும் அதிலிருந்து மனிதன் உணர்ந்துகொள்ள வேண்டியது ஒன்றுதான். அதுதான் கலை. கலை வெளிப்படும் வழிநோக்கிப் பலவாகின்றன. அவை அறுபத்துநான்கு என்றுஒவ்வொருவராலும்பேசப்பட்டு இருக்கின்றன. மிகவும் ஸ்தூலமாகிய மொழியின்வாயிலாக அறியப்படுவது கலைதான் இவர் விஞ்ஞானக்கலை, கவிதை முதலிய பலவற்றிலும் சிறந்திருப்பதால் இவரைப் பருப்பொருளாகப் பன்மொழிப் புலவர் என்றழைப்பதைக்காட்டிலும் பல்கலைச்செல்வர் என்றழைப்பதில் பொருத்தமிருக்கிறது என்று எண்ணினேம். கலையினைச் செல்வமாகக் கொண்டனுபவிப்பது அருமையான காரியம். அந்த நிலை நமது பிள்ளை அவர்களுக்குக் கிடைத் திருக்கிறது. அதனை எண்ணிச் சொக்கலிங்கப்பெருமான் திருவருளால் "பல்கலைச் செல்வர்" என்றபட்டத்தை அளிக்க லானேம். இந்த விழாவில் கலந்துகொண்ட அனைவருக்கும் சொக்கலிங்கப்பெருமான் திருவருள் நிரம்ப உண்டாவதாக

---

## எல்லாம் அவன்செயல்

இறைவா! நாங்கள் எதை நினைத்தாலும்
எதைச் சொன்னாலும் எதைச் செய்தாலும்
அவை உன்செயலே; அதனையும் நின் அருளா
லேயே உணர்ந்தோம். அதன் பயன் என்றும்
எம்செயல் இல்லை என்பதனை அறிந்ததேயாம்.

—குருஞானசம்பந்தர்.



விழாத்தலைவர், சென்னை முன்னையமைச்சர்,
உயர்திருவாளர்,

# M. பக்தவத்ஸலம் B.A., B.L., அவர்கள்

## நிகழ்த்திய தலைமையுரை

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் சன்னிதியில், இந்த நன்னுளில், தலைமை தாங்கக் கிடைத்த பாக்கியத்திற்கு மகிழ் கிறேன். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்களது அன்பு கலந்த ஆசிக்கு என் நன்றி, ஆவணிமூலத் திருநாளாகிய இன்று, ஆதீனக் கல்வி நிலயங்களின் திருவிழாக் கொண்டாடப் படுவதும், புலவருக்குப் பட்டம் வழங்கிப் பாராட்டு விழா நடத்துவதும், மிகப் பொருத்தமானகாரியம். இலவச இசை வகுப்பு ஆரம்ப விழா ஒன்றும் இன்று நடைபெறவிருக்கிறது. ஆதீனம் பல வகைகளிலும் மக்களின் நன்மைக்கான காரியங் களைச் செய்து வருவதை நீங்கள் அறிவீர்கள் நம் வாழ்வின் பல துறைகளும் ஒன்றோடொன்று பின்னி நிற்கின்றன. இதைப் போலவே கலை இலக்கியம், சமயம், ஆகிய அனைத்தும் பிணைந்து கிடக்கின்றன. இந்தவகையிலேயே நம்முன்னேர்கள் அமைத்த ஸ்தாபனங்கள் எல்லாம் விளங்குகின்றன. நம் இலக்கியங்கள் பரமனின் பாமாலைகளாகவே விளங்குகின்றன. பக்தி பெருக்கால் பாடப்பட்ட தமிழ் எவ்வாறு நம் மனதை உருக்குகிறது! சமயமின்றி தமிழில்லை. தமிழின்றி சமய மில்லை. சமயத்தால் தமிழும், தமிழால் சமயமும் வளர்ந்தன. சென்னைக்கு அருகிலுள்ள ஒருகோயிலிலுள்ள சுவரில்வரையப் பட்டுள்ள தமிழ் எழுத்துக்களைக் கொண்டே நம் பண்டைய ஆட்சி முறையை அறிய முடிகிறது. மாணிக்கவாசக சுவாமிகளும், சேக்கிழார் பெருமானும் சிறந்த இலக்கியங்களை நமக்கு அளித்துள்ளார்கள். இத்தகைய ஆதீனங்கள் இது போன்ற கலைகளில் கவனம் செலுத்தி வளர்ப்பது புதிதல்ல. தொன்றுதொட்டே. இப்பணியைச் செய்து வருகின்றன.

மகாவித்வான் மீனுக்ஷி சுந்தரம் பிள்ளை, மகாமகோ பாத்தியாய ஸ்ரீ உ. வே. சாமிநாத அய்யர் ஆகிய அறிஞர்களை இதுபோன்ற ஸ்தாபனமான திருவாவடுதுறை ஆதீனம் தமிழுலகிற்கு ஈந்தது. அவ்வாதீனம் அடுத்தஆண்டில் ஒரு தமிழ்க்கல்லூரி அமைக்கப்போவதாகவும் அறிந்தேன். வட நாட்டில் சென்று கம்பராமாயணத்தின் சிறப்பைப் பரப்பி புகழ்வடிவமாக நிற்கும் ஆதி குமரகுருபர சுவாமிகளின் காசிமடத்தை நாம் மறக்க முடியுமா? இவைகளெல்லாம் தமிழ்நாட்டிற்கு எத்தனை சேவைகள் செய்துவருகின்றன என்பதற்காகவே இதனைக் கூறினேன். தருமபுர ஆதீனம், பலவகையிலும் நம் கலைகளை வளர்த்து வருகிறது. மக்களின் அறிவை வளர்த்து வாழ்வை உருவாக்கி வருகிறது. தமிழ் வளர்ச்சிக்கு அருந்தொண்டாற்றி வருகிறது. இதை விடச் சிறப்பானதொண்டு என்ன இருக்கிறது.

## சிறையுந் தமிழும்

நான் சிறையிலிருக்கும் பொழுதுதான் தமிழ் படிக்க வாய்ப்பு கிடைத்தது. சில அரிய நூல்களைப் படித்தேன். அது ஒரு அரிய பொக்கிஷம்போல் தோன்றியது. ஒருமுறைத் தமிழைச் சுவைத்தவன் அதை என்றும் விரும்புவது இயற்கை. அதை அனுபவிக்கப் பலருக்கும் ஆசையிருந்தும் வசதி யிருப்பதில்லை அரிய நூல்களும் கிடைப்பதில்லை. இந்தச் சிரமத்தைப்போக்க இவ்வாதீனம் நல்ல நூல்நிலையம் வைத்திருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன். சென்னையில் நூல்நிலையச்சட்ட மியற்றியும் நூல்நிலையம் அமைத்தபாடில்லை. பணமிருந்தும் புத்தகம் கிடைக்காத குறைதான்காரணம். தருமையாதீனம் பல உயர்ந்தநூல்களை வெளியிட்டு இக் குறையை நீக்கிவருகிறது. வேத, ஆகம, தேவாரப்பாடசாலைகளும், தமிழ்க்கல்லூரியும் வடமொழிக் கல்லூரியும் நடத்தி வருகிறீர்கள். பல சமயத் தினரைக்கொண்ட அரசாங்கத்திடம் பண உதவியை எதிர் பார்ப்பது சிரமமான காரியம். எனவே அரசாங்கத்தை எதிர் பாராமல் நடத்துவதுதான் சிறந்தமுறை.



இக்காலத்தில் மாணவர்கள் படிக்கத் தொடங்கும் பொழுதே இதனால் நல்லதுவருமா? உத்தியோகம் கிடைக் குமா? நிறையச் சம்பளம் வருமா? என்று யோசிக்கிறார்கள். இஞ்சினீரிங் கல்லூரியில் இட நெருக்கடி. இதே சமயத்தில் ஆனால் இங்குத் தமிழ்க் கல்லூரிகளை விவசாயக் கல்லூரிக்கு ஆளின்றி மூடப்படுகிறது.

இதுபோன்ற ஆதீனங்கள் நடத்துவதாலேயே இங்கு மாணவர்கள் அதிகமாகச் சேருகின்றனர்.

## இலக்கியம் அன்று மீன்றும்

பக்தி, கலை, இலக்கியம், சமயம் ஆகிய அனைத்தும் கலந்த படிப்பை இங்குப் பெறமுடிகிறது. சேக்கிழார்பெருமான் ஆழ்வாராதிகள். நாயன்மார்களது பக்திகலந்த பாடல் சுவையை இன்றைய இலக்கியங்களில் காணமுடியுமா?

## பக்தி என்பது ஒரு சிறந்த குணம்

'பக்தி' என்பது ஒரு சிறந்த குணம் என்பதை நாம் உணர வேண்டும். கலையிலே ஒரு பக்தி. ஒரு ஆசை இவை எல்லாம் சேர்ந்ததுதான் என்று நாம் இன்று அனுபவிப்பது.

கலையை விடுத்து இலக்கியத்தை எவ்வாறு சுவைப்பது? திருவாசகம் தேவாரங்களை இசை விடுத்துப் பாடினல் சுவை உண்டா? நாமெல்லோரும் நல்லிசையுடன் தேவாரம் பாட விரும்புகிறோம். அதற்காகவே ஆதீனகர்த்தரவர்கள், இலவச இசை வகுப்பு ஒன்றையும் இன்று ஆரம்பிக்க உத்தர விட்டுள்ளார்கள். நான் மகிழ்ச்சியுடன் இவ்வகுப்பை ஆரம் பித்து வைக்கிறேன்.

---

## ஆவணிமூல விழாவில்

சென்னை, ''பல்கலைச்செல்வர்'' உயர்திருவாளர்

# T. P. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள்

M.A., B.L., M.O.L.

## ஆற்றிய பேருரை

**ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களே!**

**மற்றுமுள்ள பெருமக்களே! வணக்கம்.**

'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே
அடங்குவித்தால் ஆரொருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடாதாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே.'

என்ற அப்பரின் நினைவு — இவ்வாவணிமூலத் திருநாளன்று நாம் நினைக்கவேண்டிய நினைவு. ஆவணிமூலத் திருநாளிலே பேசவேண்டுமென்று ஆணைவந்தது, தமிழ் முதற் கடவுளாகிய சொக்கப்பிரான் திருவருள் மதுரையிலே பொங்கி எழுந்து தருமையிலே தேங்கிக்கிடக்கிறது. இன்னொன்று கேள்விப்பட்டேன். பொன்னுடைகளிலே மனம் பழகிவிட்டது முப்பத்திரண்டு வருஷங்களாக. அது ஒருவாறு மறந்தும் விட்டது. பட்டங்களிலும் ஈடுபாடு இல்லை, வெறுத்துவிட்ட என் ஆணவம், மகாசந்நிதானமவர்கள் இட்ட ஆணையினால் ஓடி ஒளிந்து கொண்டுவிட்டது.

பன்மொழிப்புலவர் என்று என்னைச் சிலர் கூறுவதுண்டு, பலமொழிகளில் அப்படி ஒன்றும் எனக்குப் புலமை கிடையாது, மக்களிடத்தே உள்ளநம்பிக்கை, சூழ்நிலையில் மற்றவர்களோடும் ஈடுபாடு - இவையே என்னைப் பிறமொழிகளைக் கற்கச் செய்தன. தெலுங்கனோடு பேசவேண்டுமென்ற



ஆசை தெலுங்கினைக் கற்கச்செய்தது. நமது மொழியைப் பற்றி மேனாட்டு மொழிகளில் வல்லோர் தம்தம் மொழிகளில் என்ன கூறியுள்ளார்கள் என்ற ஆவல் பிடர்பிடித்துந்தப் பிற நாட்டுமொழிகளைக் கற்றேன். உதாரணமாக கிரௌன் என்ற அறிஞன் சமயத்தைப்பற்றியும், எவரஸ்ட் லெயிட்ஸ் - என்ற ஜெர்மானிய அறிஞன் திருக்குறளைப் பற்றியும் கூறியுள்ளவை என் இதயத்தைக்கொண்டன.

இன்று பல்கலைச் செல்வர் என்ற பட்டத்தைப் 'பொருட்பால் பல்கலைப்புலவர்' தந்தனர். அதுகுறித்து என் மகிழ்ச்சி. வருகின்ற பிறப்பிலேனும் தமிழன் தன் உணர்ச்சி பெற்று உரிமையோடுவாழமகாசந்நிதானமவர்கள் அருளாசிவேண்டும். மாணவர்களுடைய வாழ்வில் ஒரு குறிக்கோள் வேண்டும். குறிக்கோளில்லா வாழ்வில் இன்னல் குதிகொள்ளக் காண்கின்றோம். சைவசமயா சாரியார்கள் ஆழ்வாராதிகள் குறிக்கோளோடு கூடிய வாழ்க்கையை நடத்திக்காட்டினார்கள்.

நமது அரசியல் பெருமை நவிலற்கரியது, ஊராண்மைக் கழகங்கள் பல நம்நாட்டில் இருந்திருக்கின்றன. சோழர் காலத்தன முதலிய கல்வெட்டுகள் இவற்றை நமக்குச் சொல்கின்றன. ஊராண்மைக் கழகக் கூட்டங்கள் மாண்பு நிறைந்த மண்டபங்களிலே கூட்டப்பெற்றன என்றறிய நம் முள்ளம் பொங்குகிறது. மேலும் ஓவிய காவியங்களும் கோயில்களில்தான் வளர்ந்தோங்கின. நம் கலைச்செல்வம் கடல் கடந்தும் சென்று பரவியதை வரலாறு சொல்கிறது.

சித்தன்னவாசல் ஓவியங்கள் சிறப்புடன் மிளிர்கின்றன. குடுமியாமலையில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு பல்லவ சக்கிரவர்த்தி மகேந்திர வர்மனின் இசையுணர்ச்சியைஇனிதே எடுத்துக்காட்டுகிறது. புதிய இசைகண்ட புரவலன் அவன் சித்திரகாரப் புலி என்று பேசப்படும் செம்மல் அவன். இசைக்கு ஒரு புதிய வழி வகுத்த ஏந்தல் அவன். இச்செம்மலைப்போன்ற பல்லவர்களின் பண்பாட்டை எண்ணும்

பொழுது வாழ்வை மறக்கின்றோம். அமைதி இன்பம் மனதில் களிநடம் புரிகின்றது. மேலும் புகழ்பெற்ற இப்பல்லவர் காலமே கற்கோயில்கண்ட பொற்காலம். இதை மகேந்திரன் கல்வெட்டுக்களே இனிது எடுத்துக் காட்டுகின்றன, சிதம்பரம் கோயின் சிற்பத்திறன் செப்பற்கரியது. மகேந்திரனைத் தடுத்தாண்ட பெருமை திருநாவுக்கரசரதே யாதலைப் பெரியபுராணம் பேசும். கோயில் இசை, இவை வளர்த்த பல்லவர் நால்வர் காலத்தைப்பற்றி நாம் பேசுவதே இல்லை. சங்ககாலத்தைப் பற்றிப் பேசுகிறோம். கோயில்கள் பஞ்சம் வந்தபோது மக்களுக்குப் பணம் கொடுத்துதவின. என்பதைக் கல்வெட்டுகள் கூறுகின்றன. 1903ல் எடுக்கப்பட்டவற்றிற்கு மேலே உள்ள கல்வெட்டுக்களை எல்லாம் நாம் திரட்டவேண்டும். உதாரணமாக, விசாகப்பட்டினத்துக் கல்வெட்டு மக்கள் வாழ்க்கை, அரசியல் அமைப்பு முதலியவற்றை விளக்குகிறது. நம்கலைச்செல்வம் சேரன் செங்குட்டுவனால் இமயம் வரையும், இராஜராஜ சோழனால் கடல் கடந்தும் பரவியது. நம் நாட்டு ஓவியங்கள் எகிப்த் முதலிய தேசங்களிலும் இலங்கியொளிர்கின்றன.

**தருமையின் தொண்டு:** 1000 ஆண்டுகட்கு முன் இருந்த சொற்களை விளக்கச் சொல்லுகின்ற போக்கிலேயே நூல்களை வெளியிட்டுத் தமிழுலகுக்குதவி வருகிறது தருமை சாம்ராஜ்யம். மறைந்துபோகும் தமிழ்ப்பண்பாட்டை மலர்த்தி வைப்பது தருமபுரஆதீனம். சைவமும் தமிழும் தழைத்திருக்கவே இருக்காது. தருமையாதீனம் இல்லையேல், குரு ஞானசம்பந்தர், வெள்ளியம்பலவாணத் தம்பிரான் போன்ற உத்தமர்களது தெளிந்த நடையும் மணிப்ரவாள நடையும் நூல்களாகி வந்துள்ளன. பண்டார சாத்திரங்களை ஆக்கித் தந்துள்ளார்கள். இவற்றுள் சொல்லிலே ஓடும் ஜீவநாடி எந்த நூலிலுமில்லை. தெய்விக பக்தி ஒளிவிடுகிறது இவர்கள் தந்த நூல்களிலே. எனவே இவ்வாறு நோக்கிக் கொண்டே சென்றால், தருமையாதீனம் செய்திருக்கும் தொண்டுக்குத் தமிழ் என்றும் கடமைப்பட்டுள்ளது.



துளசிதாசர் இராமாயணம் பாடியுள்ளார் இந்தி மொழியில். ஆங்கில மொழியில் பெயர்க்கப்பெற்றுள்ளது. நடேச பிள்ளையின் நற்பணி அது. வான்மீகராமாயணமும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பெற்றுள்ளது. ஆனால் கம்பராமாயணம் மட்டும் இன்னும் உலகஅறிஞர் உளத்துக்கு உதயமாகவில்லை. நன்னெறி படிக்காத மக்களில்லை. பிரபுலிங்க லீலையை நினைக்காத பெரியவர்களுண்டா! இங்ஙனமாகத் தமிழைத் தளரவிடாது காத்த பெருமை தென்னாட்டாதீனங்களுக்கே உரியது. அந்தத் தொண்டில் இன்னும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் ஈடுபட்டு வருகிறார்கள்.

ஆகமம் இருபத்தெட்டு உபாகமங்கள் பல அவற்றின் சிறப்பு ஒருவகையால் தமிழின் சிறப்பேயாகும். சிற்பச் சிறப்போடும் அப்பர் கூறிய 'குனித்த புருவமும் வெறும்பாட்டல்ல. மேனாட்டார் அனுபவிக்கின்றார். ஆகமங்களில் நாமெல்லாம் ஈடுபட்டு உழைக்கவேண்டும். ஆசிரியர்களின் அடிநிழலில் மாணவர்கள் தமிழ்ப்பண்பாடு வளரவேண்டும். திரு மாஜி மந்திரி பக்தவத்ஸலம் அவர்கள் பாரததேவியை 1952 முதல் ஏற்று இனிதாக நடத்திவருகிறார்கள். அவர்களுடைய தலைமை இன்று மிகவும் பொருத்தமானது.

**இறுதியில்:** தமிழ் இமயங்கண்டது. கங்கைக்கரையிலும் தமிழ்ப்பண்பாட்டை வளர்த்தது தமிழ். நாம் நம்மிடத்தேயே நம்பிக்கையற்றவர்களாகிவிட்டோம் தமிழ் மாணவர்கள் உறுதியும் ஊக்கமும் கொண்டு தமிழை - தமிழ்ப்பண்பாட்டை வளர்க்கவேண்டும்.

தருமையாதீனம் பிற ஆதீனங்கட்கும் ஒரு வழிகாட்டியாக ஒளிர்கிறது. குன்றக்குடியில் இருக்கும் ஆதீனகர்த்தர்களும் இங்குத் துறவு வாங்கியவர்கள். பழம்பெருமைபேசிக் காலங்கழிக்காது ஆங்காங்குச் சென்று தமிழை வளர்த்தல் நம் கடமை.

அன்றி ஆவணிமூலத்தன்று ஆண்டவன் மண்சுமந்தார், நமக்காகக் கூலியாளாகவந்து. இன்று மண்சுமந்து வருகிறார் கள் ஸ்ரீலஸ்ரீ அடிகளாரவர்கள். இவர்கள் மட்டும் மண் சுமக்கவில்லை. சொக்கநாதர் மண்சுமந்தார் குருஞானசம்பந்தர் மண்சுமந்தார் அப்போது தமிழ்ப்பேராறு ஓடும். அக்காட்சி அண்மை நிலையிலே ஈடேற, குருபாதத்தின் துணையை எதிர்நோக்குகிறேன்.

---

## உபதேச மொழிகள்

1. ஆலநிழலிலிருந்தும் ஆலமரத்தைத் தேடி அலைவாரைப்போல நின்னடிக் கீழிருந்தும் நின்னைத் தேடி அலைந்தோம்; காட்டுவாரில்லாமையால்.

2. என்கையில் ஞானவாள் இருக்கின் றது. கனவிலும் அஞ்சேன். என்னை யார் என்ன செய்யமுடியும்?

—குருஞானசம்பந்தர்.



## கோசார பலன்

ஜோதிஷார்ணவம், பிர்மஸ்ரீ. முத்துசோதிடர், திருவிடைமருதூர்.

.(நந்தனஞு புரட்டாசி 1௳ முதல் 31௳ வரையில்)
(16—9—52 முதல் 16—10—52 வரையில்)

### 1. மேஷம். அசுவதி, பரணி, கார்த்திகை ¼.

மூன்று நக்ஷத்திரக்காரர்களுக்கும் ஷை மாதம் மஹா துன்ப மாசமாகும், சதா கோபம், தாபம், நஷ்டம், விரோதம், பணத் தட்டு, கடன் வாங்குதல், சத்துருபாதை, வாஹன நஷ்டம், தொழில் குறை, அவமானச்சொல் கேள்வி. நல்லோர் பெரியோர் சாபம் கிட்டுதல், தேவ கோபம், ருணரோகம், காரியவிக்னம், எல்லாம் உண்டாகி; கடைசி ஐந்து தினங்களில் சற்று சாந்தி ஏற்படும். தசாபுத்தியும் கெடுதலாக அமைந்தவர்களுக்கு சத்துருவால் ஆபத்துண்டாகும். தெய்வபலமில்லாவிடில் சிரமம் அதிகமாகும். சனி, வியாழன் சுபவாரமாகும்.

### 2. விருஷபம். கார்த்திகை ¾, ரோஹிணி, மிருகசீரிஷம் ½.

ஷை விருஷப ராசிபலன் உத்தியோகஸ்தர்கள் தவிர, மற்ற பூமிக்குள்ளோர் யாவரும் சிரமப்படுவார்கள். தொழிலாளிகள் கும்மாளம் போடுவார்கள். நடுத்தர வகுப்பார் தாங்காத சிரமத்தை பலவிதத்திலும் அடைய நேரும். பிரபுக்கள் வியாபாரிகள் எல்லோருக்கும் விருஷபராசிபலன் கெடுதலாகும். கடவுள் சிந்தனையால் நலமடையலாம். சனிவாரம் சுபம்.

### 3. மிதுனம். மிருகசீரிஷம் ½, திருவாதிரை, புனர்பூசம் ¾.

ஷை மிதுன ராசி பலனும் இம்மாதம் கஷ்டத்தையே தரும். குடும்பத்தொல்லை, சிப்பந்திகள் தொல்லை, ருணரோக சத்ருபாதை, சகல காரியமும் தவக்கப்படல், மித்திரனே

விரோதியாகுதல் தெய்வபலமில்லாமல் போகுதல், வீண் அலேச்சல், வீண் செலவுகள், வியவசாய நஷ்டம், தன நஷ்டம், தொழில் மந்தம், வீண் அபவாதம், குடும்ப கலவரம், முதலியவைகளே ஏற்படும். மனோ நிம்மதியே இராது. ஆஸ்திக புத்தியும் தெய்வபலமும் இருந்தால் நடக்கும். வெள்ளியும் புதனும் சுபமாகும்.

4. **கடகம். புனர்பூசம் $\frac{1}{4}$, பூசம், ஆயில்யம்.**

கடகராசிக்காரர்களில், பூசம் ஆயில்யம் சுபமாகும், புனர்பூசம் மிசிர பலனைத்தரும், சுபம்கூட பூர்ணமிராமல், கடன் தொல்லே, இடம்மாறல், லாபக்குறைவு, வீண் அலேச்சல் இவைகளைக்கொடுக்கும். ஆனாலும் மத்திய பாகத்தில் மனம் ஒருவாறு சாந்தியும், சிலநஷ்டதன பிராப்தியும், எதிர்பாராத மனுஷியாள் வந்து உபகாரம் செய்தலும், சில கிரயவிக்ரயங்களும் ஏற்படும். கொஞ்சம் மனோநிம்மதி ஏற்படும். ஷை மாதம் உலகத்துக்கே ரொம்ப கஷ்டத்தைத் தரக்கூடிய கிரஹங்கள் அமைந்தபடியால் சுபகோசாரம் கூட பூர்ணமான சுபத்தைத் தராது. வெள்ளி சுபவாரம்.

5. **சிம்மம். மகம், பூரம், உத்திரம் $\frac{1}{4}$**

எல்லாக் காரியங்களிலும் ஷை ராசிக்காரர்களுக்கு மன உத்ஸாஹத்தை கொடுக்கும், எல்லாம் சித்திக்கலாகும். பிடிவாதம் ஜயிக்கும் எதிர்பாராத நன்மைகள் கிட்டும். தெய்வபலம் பிரகாசிக்கும். கிரய விக்ரயங்களில் லாபம் ஏற்படும். மேலோர் பெரியோர்களால் அனுகூலமுண்டாகும். தூரயாத்திரையும், காரிய சித்தியும் ஏற்படும். புதனும், செவ்வாயும் நன்னாளாகும்.

6. **கன்னி. உத்திரம் $\frac{3}{4}$, ஹஸ்தம், சித்திரை $\frac{1}{2}$.**

ஹஸ்த நக்ஷத்திரக்காரர்களுக்கும், முதல் பத்து தினங்கள் சிரமத்தைத்தரும். ஆனல் தெய்வ காரியங்களும் இஷ்ட தேவதானுக்கிரஹமும், தபோபலமும் விருத்தியடையும். வெகு நாளாக எதிர்பார்த்து நடவாத காரியம் கைகூடும். ராஜாங்க



மைத்திரம் அதிகமாகும் சரீரத்தில் உஷ்ணபீடையும், நேத்திர பாதையும் காட்டும். சத்கர்மாக்களில் ஆஸாபக்தியும் ஸஜ்ஜன சேர்க்கையும் ஏற்படும். புதன், வியாழன், வெள்ளி சுபவாரமாகும்.

7. **துலாம். சித்திரை $\frac{1}{2}$, சுவாதி, விசாகம் $\frac{3}{4}$.**

ஷை துலாராசிக்காரர்களுக்கு மூன்று நக்ஷத்திரமும் மத்தியம பலனையேதான் தரும். அதிக விரயமும், குடும்பத் தொல்லேகளும், தொழில் மந்தமும், காரிய விக்னமும், கவலேயும் ஏற்படும். ஷைமீ 15உ க்குமேல் தெய்வபலத்தால் அசாத்தியமெல்லாம் சுலபசாத்தியமும். சத்துரு நாசமும், தொழில் மேன்மையும், கிரயவிக்ரய லாபங்களும், கீர்த்திபத்திரமும், ஏற்கெனவே வெகு நாளாக எதிர்பார்த்திருந்த சத்துரு நாசம் ஏற்படலும் மனதுக்கு சந்தோஷமும் ஏற்படும். புதன், வெள்ளி சுபவாரமாகும்.

8. **விருச்சிகம். விசாகம், $\frac{1}{4}$ அனுஷம், கேட்டை.**

நஷ்டதன பிராப்தி, வியவசாய லாபம், மேலோர் பெரியோர் நேயம், தூரத்திலிருந்து ஆஹ்வான பத்திரம் கிடைத்தல், புண்ணிய க்ஷேத்திரவாசம், தேவதா குருபக்தி, மங்கள காரியங்கள், நூதன தொழில் ஆரம்பித்தல், வேலேயாள் சேர்க்கை. வாஹனவிருத்தி முதலிய சுபபலன்களே நடைபெறும். விசாகத்துக்கு மாத்திரம் விருச்சிகபலன் நன்மையாகாது. சனியும் புதனும் சுபவாரமாகும்.

9. **தனுசு. மூலம், பூராடம், உத்திராடம் $\frac{1}{4}$.**

மூன்று நக்ஷத்திரக்காரர்களுக்கும் சமபலனுகவே நடக்கும். விசேஷ லாபமும் இல்லே. நஷ்டமும் இல்லே. பிரபுக்கள்மைத்திரம், தொழில் விருத்தி, காரிய சித்தி யஜமானருடைய அனுகூலம், பந்துமித்திரர்களுடைய சேர்க்கை, சுபசமாசாரக்

கேள்வி. தேவதாகுரு தரிசனம், ராஜாங்க மேல்உத்தியோகஸ்தர் களின் உறவு, முதலிய சுபங்கள் உண்டாகும். வியாழன், சனி சுபவாரமாகும்.

**10. மகரம். உத்திராடம் $\frac{3}{4}$, திருவோணம், அவிட்டம் $\frac{1}{2}$.**

தொழிலாளிகளுக்கும், மாணவர்களுக்கும், வித்யார்த்தி களுக்கும் சுபமாகும். முதலாளிகள் நஷ்ட கஷ்டங்களை அடை வார்கள். பிரபுக்களும் பாதிக்கப்படுவார்கள். மாதத்தின் முற் பகுதியில் ஷெ ராசிபலன் எல்லோருக்கும் மிசிரபலனைத்தரும். பிற்பாதியில் பூர்ணமான சுபபலனைத்தரும், வியாதிசாந்தியாகும். நஷ்டதனம் கிடைக்கும் சத்துரு நாசம் ஏற்படும், தொழில் விருத்தியாகும். கிரய விக்கிரயங்கள் ஏற்படும் புதன், சனி சுபவாரமாகும்.

**11. கும்பம். அவிட்டம் $\frac{1}{2}$, சதயம், பூரட்டாதி $\frac{3}{4}$.**

கும்பராசி சம்பந்தப்பட்ட மூன்று நக்ஷத்திரக்காரர் களுக்கும் மிகுந்த கஷ்டத்தையே தரும், ரொம்ப ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். ரிணரோக சத்துருபாதை, சோரபயம், வீண் அலைச்சல் நம்பினவன் மோசம் செய்தல், சரீரத்தில் விருணம் ஏற்படல், வாகன நஷ்டம், காலிகன்றுக் குறை முதலிய சிரம பலன்களே நடைபெறும். வெள்ளியும் சனியும் சுபமாகும்.

**12. மீனம். பூரட்டாதி $\frac{1}{4}$, உத்திரட்டாதி, ரேவதி.**

மீன ராசிக்காரர்களும் பூர்ண சுபமடைய மாட்டார்கள், தொல்லைகளும் மனக்கிலேசமும் ஏற்படும். ரேவதி சம்பந்தப் பட்டவர்கள் சிரமப்பட்டு காரியத்தை சாதிப்பார்கள். பிற்பாதியில் சுபம் ஏற்படும். தொழிலாளிகளும், நீசசண்டாளர் களும் ஓங்குவார்கள். ஈதிபாதைகளால் தொல்லைகள் அதிகரிக்கும். குருபலத்தால் சுபமேயாகும். வியாழனும், புதனும் சுபவாரமாகும்.

---



**अध्यात्मरूपं तु विश्वतैजसप्राज्ञभेदेन त्रीणि रूपाणि तत्र सुषुप्तौ विलीनेऽन्तः करणेऽज्ञानमात्रसाक्षी प्राज्ञः । स चायं आनन्दमयः। स्वप्ने व्यष्टिसूक्ष्मशरीराभिमानी तैजसः। जागरे व्यक्तिस्थूलशरीराभिमानी विश्वः**

எனவும்,

**कार्यसमष्टिस्थूलशरीरोपहितो विराट्पुरुषः । अपञ्चीकृतभूत कार्यसमष्टि सूक्ष्मशरीरोपहितो हिरण्यगर्भः मायोपहित ईश्वरः । स चायमव्याकृत इति**

இவ்வாறு வரும் ஆதி பௌதிக வீசுரபேத மூன்றையும் அத்தியான்ம பேதமான சீவபேதத்துளடங்குமாறும் முற் கூறினும். இனிச் சிவசாக்கிரம் சிவசொற்பனம் சிவசுழுத்தி மூன்றிற்கும் **சிற்சொலிதன் பிராசாபத்தியன், போர்ப்புலி சாந்தன்** என்னும் சிவோபசாந்தன் என்னு மூன்றுஞ் சித்தாந்தப் பிரமேயமடங்கக் கொண்ட சுத்த சைவ வேதாந்த வழக்கம் என்க. துரியங்களுட் சீவதுரியம் பரசாக்கிரமாயும் பரதுரியம் சிவசாக்கிரமாயும் சிவதுரியம் சொரூபத்திற்கடி யாகலானும் அபிமானிகள் வேறு கூறப்பட்டார்கள் என்க. பிறவும் விரித்துக் கொள்க. *29*

*29.* * * *

"இனியவற்றின் மேலாக வியம்புகின்ற விவையொன் பானவத்தைகளின்" என்பது. ஐவகைப் பிரணவங்களுள் முற்கூறிய தூல பிரணவ மென்னும் வாக்கிய பிரணவா வத்தையபிமானிகள் மகா சத்த பூருவமாக சூக்கும பிரண வத்தின் அவத்தாபிமானிகளாக வருவரென்றும் மற்ற மூன்று பிரணவாவத்தைகட்குமபிமானி..............என்று பெயர் பெறுவர் என்றும் கூறுகின்றது. ஐவகைப் பிரணவ மாவ்து தூலப்பிரணவம், சூக்குமப் பிரணவம் அதி சூக்குமப் பிரணவம் மகாப்பிரணவம் ஆனந்தப்பிரணவம் என்னுமிவை, அது வருமாறு திருமந்திரத்தில்,

தூலப் பிரணவஞ் சூக்குமப் பிரணவம்
மேலதி சூக்குமம் மாசூக்குமமே
ஆலிய வானந்தத் தாரமைந்தாமோமத்
தூலது கண்டார் சுகானந்த சித்தரே.

எனவரும். ஈண்டுச் சச்சிதானந்த சொரூபமான பரப் பிரமத்தைப் பிரணவமென்றது சப்தப்பிரமரூபமான பிரணவத்துக்கு வாச்சியமதுவேயாகலின் வாசகத்தின் பெயர் வாச்சியத்திற்கிட்டது. அந்தப் பிரமத்தை அடைதற்கேதுவாகலின், அன்றிப் பிரணவமென்பது பிரமத்தின் பெயர். அதை யுணர்த்துதலின் ஓங்காரத்திற்குப் பிரணவமென்று பெயரெனினுமாம். அது சூத சங்கிதையில்,

**परापरविभागेन प्रणवस्तु द्विधा मतः ।
परस्तु प्रणवः साक्षात्सच्चिदानन्दलक्षणः ॥
प्रकर्षेण नवं यस्मात्परब्रह्म स्वभावतः ।
अपरः प्रणवः साक्षाच्छब्दरूपः सुनिर्मलः ॥
प्रकर्षेण नवत्वस्य हेतुत्वात्प्रणवः स्मृतः ।
परमप्रणवप्राप्तिहेतुत्वात्प्रणवो यथा ॥**

எனவரும். ஈண்டு **प्रकर्षेण नवम्** என்றது வேறு காரணம் வேண்டாது தானே விளங்குவதாம் என்க. ஈண்டு **இனி இவற்றின் மேலாக**, வென்றது தூலப் பிரணவமான வாக்கியப் பிரணவாவத்தை யபிமானிகளின் மேலென்க. **இவற்றி**னென்றது அபிமானி தேவதைகளை மேலாக வியம்புகின்ற விவை யொன்பானவத்தைகளின் **அபிமானிகளும் அவ்வாருகப் பன்னவரும்** என்று கூட்டுக. அவ்வாருக என்பது முன்னர்ப் **பத்தாலு நான்கு துரியத்து முன்போலொன்பானுரைக்கும் அபிமானிகளு** மென்பதனுல் விளங்கும். மீளவுமவ்வாறு கூறிற்றூலப் பிரணவ சூக்குமப் பிரணவாவத்தாபிமானி தேவதைகட்குப் பேதமில்லை என வருமென்பதை நீக்குதற்கு விசேடணங் கூட்டியுதாகரிக்கின்றது. மகா விசுவன் மகாதைசசன் என்ருற்போற் **பகர் பெயரால் வருவர்** என்றது: மற்றவையுமதுபோல



வருமாறு:— மகாபிராஞ்ஞன் மகா விராட்புருடன் மகா விரண்ணியகருப்பன் மகா அவ்வியாகிருதன் மகா சிற்சொலிதன் மகாப்பிராசாபத்தியன் மகாபோர்ப்புவிசாந்தன் என வுரைத்துக்கொள்க. இவ்வாறு தூலப் பிரணவஞ் சூக்குமப் பிரணவமுமிரண்டும் போகமற்ற அதிசூக்குமப் பிரணவம் மகா சூக்குமப் பிரணவம் ஆனந்தப் பிரணவ மூன்றிற்கும் அவத்தையபிமானிகளா(ன தே)வதைக் கூறுமிடத்து அதிசூக்கும விசுவன் மகா சூக்கும விசுவன் ஆனந்த விசுவன் அதிசூக்கும தைசதன் மகா சூக்கும தைசதன் ஆனந்த தைசதன் என்ருற்போல மற்ற பிராஞ்ஞன் விராட்புருடன் இரணியகருப்பன் அவ்வியாகிருதன் சிற்சொலிதன் பிராசாபத்தியன் போற்புவி சாந்தனுக்குங் கூறிக்கொள்க வென்பது தோன்ற **மற்றவற்றினுக்கு மனுபவத்தின் பேதமாயுபாதி என்றேயறையுமபிமானிகளுந்தாரப் பெயர் பெறுவர்** என்றது ஆண்டுக்காரிய காரணவுபாதிகளின்ருயினும் அனுபவ பேதங்களுமுபாதியாக எல்லாவற்றிற்கு அபிமானிகள் உண்டென்பதற்கு இவ்வாறு கூறுமவத்தாபிமானி தேவதைகளெல்லாம் சீவான்மாவின் வடிவாயே யிருப்பர். சீவனெ........சிவமுஞ் சொரூப........மெற பிரணவபேதா பேதாவத்தா சைதன்னியமுமாகலின். அது, ஞானசித்தியில்,

**कार्योपाधिरयं जीवः करणोपाधिरीश्वरः ।
कार्यकारणतां हित्वा पू    बोधो    ते ॥**

என வருமாற்ருன் உணர்க. அன்றி, சிவசைதன்னியத்திற்குப் பரிணமம் கூறும் பக்கத்திலும்,

**परात्परतरं ज्ञेयं गुरुरूपं प्रकाशकम् ।
गुरूत्पन्नं शिवं साक्षाच्छिवोत्पन्नं ब्रह्म व्योमकम् ॥
व्योमोत्पत्तिः परमात्मा परमोत्पत्तिरात्मनः ।
आत्मनोत्पत्तिरव्यक्तमव्यक्ताज्जायते महान् ॥
महतोत्पत्तिरहङ्कारः अहङ्कारे गुणत्रयम् ।**

गुणत्रये क्रियामूर्तिं मूर्त्यर्धे तु जगत्त्रयम् ॥
जगन्मध्ये सर्वयोनिर्योनिमध्ये चराचरम् ।

எனவரும் ஞானசித்தி வசனத்தாலுஞ் சீவன் பரமாயும் சிவ மாயும் குருசுவரூபமாயுமுள்ளவன் என்க. ஈண்டு, பிரம்ம வியோமகம் என்றது பராசத்தியை. அதிலே பரனுகிற வீசுவரனுக்குற்பத்தியும் அந்த வீசுவரனிலே சீவனுக்கு பத்தியும் கூறுதலின். இந்தச் சத்தி சிவோபாதி பேதத்தில் உபசாந்தமென வருமாற்ருனுமாம் அன்றி,

कुटिला कुण्डली बिन्दुरिच्छाज्ञान क्रियोदितम् ।
...चिच्छक्ति ज्ञानपराऽचिच्छक्तिः कुण्डली परा ॥
तत्क्रियाशक्तिरूपत्वं चिदचिद्बैन्दवं तथा ।
इच्छाशक्तिबैन्दवं तच्चिदचिन्मिश्रमैरिति ॥

எனவும்,

बिन्दुर्भिद्यति नादेन तत्काले त्रीण्यणूद्भवम् ।
अनादिकाले त्रिधात्मानं शक्तिभेदोदयं भवेत् ॥
अनादिकाले क्रियात्मानं कुटिला कुण्डलिनां स्थितम् ॥

எனவும் முன் உதாகரித்த ஞானசித்தி ஆகமத்தாற் சத்தி பரிணாம வாதமெனினு மூலகாரண விசாரத்தாற் சீவ பரிணாமவாதமாய் முடிதலினுனுஞ் சீவனே பரமுஞ் சிவமும் குருசுவரூபமுமாம் என்க. ஈண்டுச் சத்தி என்றது **कुटिला कुण्डलिनां स्थितम्** என்ற குண்டலி சத்தி எனினுமாம் அதுவும் சிவ சைதன்னிய சத்தியிலுண்டானமையான் இவற்றுள்,

आत्मनोत्पत्तिरव्यक्तमव्यक्ताज्ज्ञायते महान् ।

என வந்தது.




# பாராட்டு விழா

சமய உணர்ச்சி நாடெங்கணும் பரவ அல்லும் பகலும் உழைத்துவரும் திருவண்ணுமலை யாதீனம் குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணுசலதேசிக சுவாமிகள் அவர்கள் 17–8–52 அன்று காலை தருமபுரத்துக்கு எழுந்தருளினுர்கள். தருமபுர ஆதீனம் ஆதிகுருமூர்த்திகளைத் தரிசித்தார்கள். ஆதீனத்தின் ஆத்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் செய்வித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் வருகையறிந்து ஆதீனக் கல்விநிலையச் சார்பில் பாராட்டு விழா நடத்த ஏற்பாடாயிருந்தது. காலை 10-மணியளவில் மகாசந்நிதானம் அவர்கள் அருணந்தி நிலையத் துக்கு எழுந்தருளினுர்கள்.

கல்லூரித் துணைத்தலைவர் வித்வான் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் வரவேற்புரை கூறினுர்கள். சமயவளர்ச்சிக் கூட்ட மொன்று ஏற்படுத்தி 'அருள்நெறித் திருக்கூட்டம்' என்ற கழகத்தை தோற்றிய பணியைப் பாராட்டி மாணவர்களால் பாராட்டுரை வாசிக்கப்பெற்றது. கல்விநிலைய மாணவர்களின் எதிர்கால வாழ்க்கைச் சீரமைப்புக்குரிய திட்டங்களை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் கூறினுர்கள். வணக்கம் தெரிவிக்கப் பெற்றது. பின்னர் மகாசந்நிதானமவர்கள் குடந்தைக்கு எழுந் தருளினுர்கள்.

### ஆதீனக் கல்வி நிலையங்களின் சார்பில்

# சுதந்திரதின விழா

காலை 8 மணி அளவில் மாணவ மாணவிகள் தேசீய கீதத் துடன், இந்தியக் கொடியேந்தி ஊர்வலம் வந்தார்கள். மாணவர் களிடத்தில் உற்சாகம் காணப்பட்டது. ஜே கோஷம் வானைப் பிளந்தது. தொடக்கநிலைப் பள்ளியிலும், கூட்டுறவு பண்டகசாலை யிலும், கல்லூரியிலும் கொடி வணக்கத்துடன் ஸ்ரீமத் சாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் கொடியேற்று விழா நடை பெற்றது. பின்பு கூட்டம் மடாலய முகப்பை அடைந்தது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி இருந்தார்கள். சுதந்திர தினத்தைப்பற்றி தேவாரப்பாடசாலை ஆங்கில ஆசிரியர் வெங்கட்ட ராமய்யரும், கல்லூரிப் பேராசிரியர் முத்து, சு. மாணிக்கவாசக முதலியாரும், மாணவன் சொ. சிங்காரவேலனும், கல்லூரி துணைத் தலைவர் ச. தண்டபாணி தேசிகரும் பேசினுர்கள். மாணவர்கள் அனைவருக்கும் தின்பண்டங்கள் வழங்கப்பட்டன, தேசீய கீதத் துடன் விழா இனிது முடிந்தது

Regd. No. M. 4454.                    GNANASAMBANDAM

# சிவஞானசித்தியார் பாட வகுப்பு



**பதினாறெடுக்கத்து வாசலில் சித்தியார் வகுப்பு மாணவர்கள்**

31—8—52 ஞாயிற்றுக்கிழமை காலை 9 மணிக்கு சொக்கலிங்க பூஜைக் கட்டில் சித்தியார் வகுப்பு தொடங்கப் பெற்று வகுப்பிற்கு ஆசிரியர் சைவத் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள். வகுப்பு ஒவ்வொரு நாளும் மாலை 7 மணிமுதல் நடை பெற்று வருகிறது ஆதீனத்து அடியார்களும், கல்லூரி மாணவர்கள் பலரும் கலந்து பாடம் கேட்டு வருகிறார்கள்.

## ஜன்மநக்ஷத்திரத் திருநாள்.

தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் மாத ஜன்ம நக்ஷத்திர நாட்களில் திருப்பதிகம்பெற்ற சிவஸ்தலங் களில் ஆதீனச் சார்பில் அபிஷேக ஆராதனைகள் செய்வித்து அவ்வத்தலப் பதிகத்தையும் அச்சிட்டு வழங்கி வருதல்போல இம்மாதத்திலும் 24—8—52 அன்று திருவலம்புரம் ஸ்ரீ வல புரநாத சுவாமி ஆலயத்தில் அபிஷேக ஆராதனை செய்வித்து தலப்பதிக வெளியீடும் வழங்கப்பெற்றது.

Printed & Published by K. Sundaresa Iyer, Agent, Dharmapuram Adhinam at
Gnanasambandam Press, Dharmapuram, (Mayuram) 9—9—1952.

